# தேசிங்குராஜன் கதை

## காப்பு.

### விநாயகர் தோத்திரம்.

மேதினி யாச ரெல்லாம் வியப்புடன் புகழ்வ தாக
நீதியு நெறியுஞ் செங்கோல் நிலைமையுந் தரும முற்று
தீதிலா தென்றுங் காக்குந் தேசிங்கு ராஜ னற்சீர்க்
காதையை யெடுத்து ரைக்கக் கணபதி காப்புத் தானே.

### முருகர் தோத்திரம்.

ஜெயங்கொள்தே சிங்கு ராஜன் சீர்க்கதை யதனைச் சொல்ல
வயங்கொண்மா மயிலி லேறும் வருந்திரு முருகர் தூய
நயங்கொள்பா தத்தை யுந்தா ளுயகி மார்கள் சீரார்
வியங்கொள்பா தத்தை யுந்தான் விரும்பியே வணங்கு வோமே.

### சிவ தோத்திரம்.

தஞ்சமென் றோரைக் காக்குந் தயாளதே சிங்கு ராஜன்
எஞ்சலில் கதையைச் சொல்ல வெந்தையாஞ் சுந்த ரேசர்
செஞ்சர ணத்தை யுந்தன் தேவிபார் வதியாள் பாகங்
கொஞ்சுமா வடிவை யுங்கை கூப்பியே வணங்கு வோமே.

### விஷ்ணு தோத்திரம்.

சங்குசக் கரங்கோ தண்டந் தண்டுவாள் கரத்திற் கொண்ட
செங்கண்மால் பதமுஞ் சீரார் திருவின்பொற் பதமு நாளும்
பொங்கமா யிறைஞ்சி யுன்னிப் புகழுந்தே சிங்கு ராஜன்
துங்கமாங் கதையைச் சீராய்ச் சொல்லுவோம் புவியி னோர்க்கே.

## சரஸ்வதி தோத்திரம்.

பலகலைக ளுணர்ந்தேற்றிப் போற்று கின்ற
பாவாணர்க் குதவிசெய்து பாது காக்கும்
நிலைமையுள்ள தவளநிற முடையாள் வாசம்
நிகழுஞ்சாஸ் வதிபுயத்தா ளிணைகள் போற்றி
அலையெறியுங் கடல்சூழும் புவியோர் மெச்சும்
அனங்கனுங்கண் டச்சங்கொள் ளழகு வாய்ந்த
நிலையிலா மணிமுடித்தே சிங்கு ராஜன்
வியன்றருசீர்ச் சரித்திரத்தை விளம்பு வோமே.

## அவையடக்கம்.

முத்தமிழின் பயனுணர்ந்த புலவோர் முன்னே
மூடனடி யேனுயேன் பிதற்று கின்ற
பத்திரமிகுந் தொழிற்செங்கோல் செலுத்து கின்ற
பராக்கிரம னதிவீர ராம னென்றே
எத்திசையும் புகழுந்தே சிங்கு ராஜன்
எழிற்கதையிற் சொற்குற்றம் பொருட்குற் றந்தான்
மெத்தவிருக் கினுங்குதலைச் சொல்லைப் போலே
வியங்கொள்வார் பாராட்டி நயங்கொள் வாரே.

## நாட்டுச்சிறப்பு

சீருஞ் சிறப்புமுள்ள தேசிங்கு மகாராஜன்
பேரும் பிரபலமும் பெருகி வரும்படியாய்
செந்நெல் கதிர்பழுத்துச் செழித்து வளர்கிறதும்
கன்னற் கொழுத்துக் காட்டை மறைக்கிறதும்
வன்புலி யும்பசுவும் மருவியே வாழ்கிறதும்
தெம்புட னேயானை செழித்துத் திரிகிறதும்
காடை கௌதாரி காட்டுப்புறுக் கூவுறதும்
பேடை மயில்கூடிப் பிரிய மடைகிறதும்
புன்னை மலர்ச்சோலை பொருந்தி நிறைந்திடவும்
தென்னமரம் வாழைமரம் செழித்து நிறைந்திடவும்
சந்தனச் சோலைகளும் ஜாதிமல்லி பூத்திடவும்

மந்தாரை கோங்கு மல்லிகைப்பூச் சாலேகளும்
தாமரைப் பொய்கைகளும் தடாகமுள்ள வேரிகளும்
வாமமுறுங் கான்யாறும் வாய்ப்புகளு மென்னசொல்வோம்.

## நகரச்சிறப்பு

செஞ்சி நகர்ச்சீரைச் சிலவற்றை எடுத்துரைப்போம்
எஞ்சலிலா வீதிகளு மெழிற்றோ ரணநிறையும்
வாழைக் கமுகுகளும் வளமாகக் கட்டியதும்
ஏழைகளைக் கூவியன்னம் யிட்டு வருகுவதும்
இந்திர லோகம்போ லிருக்கு மாண்மனையும்
கந்தமின் ஞர்களிரு கற்பின் திறமைகளும்
வேதியர்கள் கூடி வேதங்கள் படிப்பதுவும்
நீதி தவறுமல் நிகழ்ப்புலவர் பாடுவதும்
பொன்னகரின் தன்மைபோற் பொருந்திநின் ருடுவதும்
மன்னர்சீர்க் கீர்த்திதன்னை வாழ்த்தி வருகிறதும்.

## கதையின் வரலாறு

வடக்கேவெகுதூர மிருக்குதுபார் மகமேரு சாரலொன்று
அந்த-மகமேருசாரலில் தபங்கள்செய்கிறார் வன்னலட்சம் ரிஷிகள்
கர்த்தனைநோக்கி தபங்கள்செய்கிறார் கனத்தமகா ரிஷிகள்
சிவசிவாவென்ற சத்தமங்கே தெய்வலோகங் கேட்கும்
அரகராவென்ற சத்தமங்கே ஆகாயமட்டு மெட்டும்
கோவிந்தாவென்ற சத்தமங்கே கொடிமுடி தான்கேட்கும்
மாயவாவென்ற சத்தமங்கே வைகுந்தந் தான்கேட்கும்
மந்திரவித்தை தந்திரவித்தை மகாவித்தை தானறிவான்
அதிலொருதுலுக்கன் கடவுளைநோக்கி யகோர தவஞ்செய்தான்
பகவானைநோக்கி துலுக்கனொருவன் பார தவஞ்செய்தான்
இந்தப்படியாய் ரிஷிகளெல்லாம் இருந்து தபசுசெய்தார்.

## குதிரையின் பெருமை

அப்போ-தெய்வலோகத்திற் பிறந்தகுதிரை திகைதப்பி வருகுதுபார்
இரங்கர்கிருபையால் திகைத்தகுதிரை நடன மாடுதுபார்
உச்சிமலேகள் புல்லுகள்மேய்ந்து ஒதுங்கி வருகுதுபார்
சாரலோரமாய்ப் புல்லுகள்மேய்ந்து சாய்ந்து வருகுதுபார்

கோடிசூரிய னுதித்தாப்போலே குலுங்கி வருகுதுபார்
தங்கமயமான குதிரையைக்கண்டான் தபஞ்செய்யுந் துலுக்கன்
குதிரையைக்கண்டு ஓடிவருகிறன் கோங்குதேசத் துலுக்கன்
துலுக்கனைக்கண்டு கெர்ச்சனைசெய்தது தெய்வலோகக் குதிரை
அஞ்சனம்போட்டுக் குதிரைவலிமையை அறிந்து கொண்டானும்
மந்திரவலையை விசிறிப்போட்டு மடக்கிப் பிடித்தானும்
தந்திரவலையை விசிறிப்போட்டுத் தடவிப் பிடித்தானும்
மந்திரத்தாலே குதிரைப்பாகரை வரிசையாய் வைத்தானும்
நாலாயிரம்பேர் குதிரைப்பாகரை நடுவாக வைத்தானும்
குதிரைமேலே கூடாரம்போட்டுக் கொண்டுமே வாரானும்
ஐந்துநாழிவழி தூரமிருந்து அதட்டியே வாரானும்
தூரத்திலிருந்த குதிரைப்பாகருஞ் சூழ்ந்துமே வாராராம்
தகர்த்தாகாயமாய் நடுவிலிருந்து தாண்டுது முன்னாலே
மந்திரவலையி லகப்பட்டகுதிரை வருகுது முன்னாலே
மந்திரத்தாலே மாயாபக்கிரி மடக்கிக் கொண்டுவாரான்
டில்லிக்கு வெகுமதி கொடுப்போமென்று சேரக் கொண்டுவந்தான்
வெகுமதிசெய்யப் பாராசாரியை வெளியில் கொண்டுவந்தான்
வெளியில்நிறுத்தி பக்கிரியவனும் வேலையென்ன செய்தான்
குதிரையைச்சுற்றி கூடாரம்போட்டு கொடிய காவல்வைத்தான்
யானைசங்கிலி போட்டுமடக்கினர் அந்தக்குதிரை யைத்தான்
மந்திரத்தாலே சங்கிலிமாட்டி மடக்கி நிறுத்தினானும்
மந்திரவலையை யவிழ்த்துவிட்டான் மாயா பக்கிரியும்
மயக்கந்தெளிந்து கண்ணுற்கண்டது வன்னமேகக் குதிரை
அண்டமிடிந்து விழுந்தாற்போலே அலறி கனைத்ததுபார்
கோட்டையிடிந்து விழுந்தாற்போலே குலுங்கக் கனைத்ததுபார்
டில்லிபட்டணம் ஐங்காதவழியும் சேர நடுங்குதுபார்
கூடகோபுரம் மாடமண்டபம் குலுங்கி நடுங்குதுபார்
பட்டணமுள்ள ஜனங்களெல்லாம் பதறி விழுந்தார்கள்
பாட்சாதகத்து நடுங்கியவனும் பதறி விழுந்தானும்
மூன்றரைநாழி மூர்ச்சையாயினர் முழுதும் ராஜாக்கள்
பட்டணத்திலுள்ள ஜனங்களெல்லாம் பதறி மூர்ச்சையானர்

டில்லிபதுரையும் மூர்ச்சைதெளிந்து திகைத்து விழுந்தானும்
அண்ணாவாடா தம்பிவாடா ராஜலிங்க பாபு
இது-வென்ன அதிசயம் என்ன அதிசயம் ராஜலிங்க பாபு
அண்டமிடிந்து வீழ்ந்ததோசொல்லும் ராஜலிங்க பாபு
ஏழுலோகங் கூடிவந்ததோ ராஜலிங்க பாபு
சடுதியிலோடி சுற்றிப்பாரும் ராஜலிங்க பாபு
ஆனால்நல்ல தாகட்டுமென்றான் ராஜலிங்க பாபு
ஒற்றைக்குதிரைக் காரனையா ராஜலிங்க பாபு
ஓடியேசுற்றிப் பார்த்தானையா ராஜலிங்க பாபு
வடக்குதிசையில் மின்னுதுபாரு வன்னமேகப் புரவி
குதிரைவருவதைக் கண்ணாலே கண்டான் ராஜலிங்க பாபு
எதிரிலேவந்து சலாஞ்செய்தா னிருந்த பக்கிரியும்
பதில்சலாமும் கொடுத்தானையா ராஜலிங்க பாபு
சலாம்செய்து குதிரையைக் கண்டான் ராஜலிங்க பாபு
குதிரையைக்கண்டு பெருமூச்செறிந்தான் ராஜலிங்க பாபு
ஐயாகேளும் ஐயாகேளும் கோங்கு பக்கிரியே
எந்ததேசத்தி லிருந்தகுதிரை யிங்கே கொண்டுவந்தீர்
தெரியவெனக்குச் சேதிசொல்லுந் தேசத்து பக்கிரியே
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் கோங்கு பக்கிரியும்
ஐயாகேளு மையாகேளும் ராஜலிங்க பாபு
இந்தவுலகத்தில் பிறந்ததல்ல இந்தப் புரவியுந்தான்
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டது குதிரை யானலும்
கோபம்வந்து மூண்டுகொண்டது குதிரைக் காலும்
கடகடகடகட கடகடவென்று கனைத்து நின்றதுவே
தெய்வலோகத்திற் பிறந்தகுதிரை சொன்னமேகக் குதிரை
பன்னிரண்டுவயது ஆச்சுதுபாரு பாரா சாரிக்கு
வெள்ளிக்கிழமை பிறந்தகுதிரை வேகமான குதிரை
ஒருவருமண்டக் கூடாதுபாரு உயர்ந்தமேகக் குதிரை
இந்தவுலகத்தி லொருவருமில்லை இந்தக் குதிரையேற
மனதுதுணிந்து ஏறினானல் மாண்டு போய்விடுவார்
தைரியங்கொண்டே ஏறினானல் சிதைந்து போய்விடுவார்

தெய்வவரத்தினால் பிறந்தபிள்ளை தேசி யேறவேணும்
வரத்தினாலே பிறந்தபிள்ளை வந்து மேறவேணும்
பூமிபாரந் தீர்க்கப்பிறந்தவன் இப்புரவி யேறவேணும்
தேவாடியிற் பிறந்தபிள்ளை தேசி யேறவேணும்
அந்தச்சொல்லைக் கேட்டவுடனே அலறி விழுந்தார்கள்
டில்லிபதுரைக்கு இணங்கொடுக்க தேடிவந்தே னென்றான்
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் ராஜலிங்க பாபு
கேட்டவுடனே மனதுகலங்கி கீழே விழுந்தானும்
விழுந்தவுடனே தைரியங்கொண்டு மெள்ள எழுந்தானும்
எழுந்தவுடனே ராஜதுரைக்கு எழுதியே விட்டானும்
ஓலையைக்கொண்டு கையிலேகொடுத்தார் ஓடிவந்து தூதர்
ஓலையைப்பிரித்து வாசித்துப்பார்த்தான் டில்லிப துரைதானும்
கலகலவென்று சிரித்தானையா டில்லிப துரைதானும்
அண்ணாவாடா தம்பிவாடா மந்திரி துரைமாரே
தெய்வலோகத்துப் புரவியொன்று தேடியே வந்ததாம்
குதிரையேறி சவாரிசெய்துநான் கொண்டு வரவேணும்
ஜல்திஜல்தி குதிரைகொண்டுவா அர்க்காரு பாப்பையா
பட்டத்துயானையைக் கொண்டுவாடா அர்க்காரு பாப்பையா
ஆனால்நல்ல தாகட்டுமென்றான் அர்க்காரு பாப்பையன்
சலாம்வாங்கித் திரும்பினானையா அர்க்காரு பாப்பையன்
தண்டுக்குச்சைகை யூதினானையா அர்க்காரு பாப்பையன்
பட்டத்துயானை வந்துநின்றது ராஜா முன்னாலே
யானையின்பேரி லேறினானையா டில்லிப துரைதானும்
முதல்மந்திரி ராஜலிங்கனு முன்னே போயிருந்தான்
மற்றமந்திரி பிரதானிகளும் வரிசையாய் நடந்தார்கள்
பேட்டிக்குவந்த ராஜதுரைகள் பின்னே நடந்தார்கள்
நாலாயிரந் துருப்புக்குதிரை நடந்தது முன்னாலே
காலாள்கள்சேனை யாயிரம்பேர் கடுக நடந்திடவே
திமிதிமிதிமிதிமி திமிதிமியென்று சேனை நடந்திடவே
சேனைவருவதைக் கண்ணாலேகண்டது தெய்வலோகக் குதிரை
யானைவருகிறதைக் கண்ணாலேகண்டது தெய்வலோகக் குதிரை

கிடுகிடுகிடுகிடு கிடுகிடுவென்று கெர்ச்சனை செய்ததுவே
கெர்ச்சனைசெய்த சப்தத்தினாலே கீழே விழுந்தார்கள்
அண்டமிடிந்து விழுந்தாற்போலே அலறி விழுந்தார்கள்
ஆனைசேனை குதிரைகளெல்லாம் அங்கே விழுந்திடவே
டில்லிபதுரை யானையின்மீதில் திடுக்கிட்டு விழுந்தானும்
சுற்றிலுமிருந்த ராஜதுரைகள் துள்ளி விழுந்தாராம்
மூலைக்குமூலை துருப்புக்குதிரை முறித்துக்கொண் டோடுதுபார்
அவ்வதிசயத்தைக் கண்ணாலேகண்டான் டில்லிப துரைதானும்
அண்ணாவாடா தம்பிவாடா ராஜலிங்க பாபு
வந்ததொரு மந்திரிமாரும் நடுங்கி யோடிவந்தார்
கலகலவென்று சிரித்தானையா டில்லிப துரைதானும்
இது-வென்னவதிசயம் என்னவதிசயம் ராஜலிங்க பாபு
இத்தனைநாளு மிந்தக்குதிரையை எங்கும் பார்த்ததில்லை
டில்லிவீந்ததைக் கண்ணாலேகண்டான் தேச பக்கிரியும்
முழங்கால்சிலை போட்டேயவனும் முன்னே சலாஞ்செய்தான்
பதில்சலாமுங் கொடுத்தானையா டில்லிப துரைதானும்
சுற்றிலுமிருந்த ராஜதுரைகள் சூழ்ந்தே சலாஞ்செய்தார்
பேட்டிக்குவந்த ராஜதுரைகள் பெரிய சலாஞ்செய்தார்
ஐயாகேளு மையாகேளும் கோங்கு பக்கிரியே
இந்தப்புரவி யெங்கேபிறந்தது எனக்குச் சொல்லுமையா
ஐயாகேளு மையாகேளும் டில்லிப துரையேநீ
தெய்வலோகத்தில் பிறந்தகுதிரையைத் தேடிக் கொண்டுவந்தேன்
இனுங்கொடுக்கக் கொண்டுவந்தே னிந்தப் புரவியைத்தான்
இந்தப்புரவி ஏறுகிறராஜர் இந்த வுலகிலில்லை
இதற்கென்றுபிள்ளை பிறக்கப்போகிறு னிந்த வுலகிலேதான்
அந்தமட்டுக்கும் பாராசாரியை யடக்கி வையுமையா
குதிரைசேதியை சொல்லியேநின்றான் கோங்கு பக்கிரியும்

## கோங்குபக்கிரி டில்லிபாட்சாவுக்கு குதிரையைக் கொடுத்து வெகுமதி பெற்றுக்கொண்டது

அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் டில்லிப துரைதானும்
சந்தோஷமாகி பக்கிரியவனைத் தழுவிக் கொண்டானும்

என்னுடன்கூட டில்லியில்நீயு மிருந்து போகவேணும்
விருந்துபுசித்து இனும்கொடுப்பதை வேண்டிப் போகுமையா
ஆனால்நல்ல தாகட்டுமென்றான் அந்தப் பக்கிரியும்
அண்ணுவாடா தம்பிவாடா ராஜலிங்க பாபு
குதிரைக்கொட்டடி கொண்டுபோய்வையும் ராஜலிங்க பாபு
கொள்ளு புல்லு தண்ணீர் கூசாமல்வையும் ராஜலிங்க பாபு
அந்தப்படிக்கு உத்தாரங்கொடுத்தான் டில்லிப துரைதானும்
ஆனால்நல்ல தாகட்டுமென்றான் ராஜலிங்க பாபு
அண்ணுவாடா தம்பிவாடா அர்க்காரு சின்னையா
ஜல்திஜல்தி தயார்செய்யடா அர்க்காரு சின்னையா
ஆனால்நல்ல தாகட்டுமென்றான் அர்க்காரு சின்னையன்
குதிரைகொட்டடி கொண்டுபோய்ச்சேர்த்தான் அர்க்காரு சின்னையன்
கோடிப்பாகரை கொலுவாகவைத்தான் அர்க்காரு சின்னையன்
சுற்றிலுந்துருப்பு சிப்பாய்வைத்தான் அர்க்காரு சின்னையன்
பந்தோபஸ்தா யிருக்குதுபாரு பாராசாரி குதிரை
டில்லிபதுரையும் பக்கிரியவனைச் சேரக் கொண்டுவந்தார்
விருந்துசெய்து சந்தோஷமாக மெச்சி யென்னசெய்தான்
ஊருபதிகள் நாடுகளெல்லாம் உறுதியாய்த் தான்கொடுத்தான்
வேண்டியமட்டுந் திரவியங்கொடுத்து வேண்டிக் கொண்டானும்
தங்கமயமான சாலுவையொன்று தலைக்குக் கொடுத்தானும்
அளித்தவெகுமதி பெற்றுக்கொண்டான் அந்தப் பக்கிரியும்
அந்தநாளுஞ் சென்றுமறுநாள் ஆச்சுது ஐயாவே
தங்கத்தகத்தி விருந்தேயாக தனிமையாய்ச் செய்கிறானும்
பொன்னின்தகத்தி விருந்தேயாக பொறுமையாய்ச் செய்கிறானும்
தகத்திவிருந்து யோசனைசெய்தான் டில்லிப துரைதானும்
அண்ணுவாடா தம்பிவாடா மந்திரி துரைமாரே
இந்தப்புரவி ஏறுகிறராஜன் இந்த உலகிலுண்டோ
பாராசாரி ஏறுகிறராஜன் பத்துத் திக்கிலுண்டோ
இந்த-பாராசாரி ஏறுகிறராஜனை நான்-புகழ்ந்து காணவேணும்
யோசனைசெய்து தெரியச்சொல்லும் உற்ற மந்திரிமாரே
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டார் அந்த மந்திரிமாரும்

எல்லோருங்கூடி யோசனைசெய்தார் அந்தச் சபையிலேதான்
முதல்மந்திரி ராஜலிங்கனு முன்னே ஓடிவந்தான்
முழங்கால்மண்டி போட்டேயவனும் முன்னே சலாஞ்செய்தான்
ஐயாகேளு மையாகேளும் டில்லிப துரையேநீர்
ஐம்பத்தாறு தேசராஜரை அறிந்து சொல்வேன்கேளும்
எட்டுதிசையி லுள்ளராஜர் இதற் குதவமாட்டார்
கோடிராஜ ரிருக்கிறாரையா குதிரை ஏறமாட்டார்
தெரிந்தமட்டுஞ் சொல்லுகிறேன்கேள் டில்லிப துரையேநீர்
தெற்கேவெகுதூர மிருக்குதுபார் செஞ்சிகோட்டை துருகம்
செஞ்சிதுருக்கத்தி லரசுபண்ணுறுன் சூரசிங்கு மகாராஜன்
சூரசிங்கு குமாரனையா தரணிசிங்கு ராஜன்
தோரணிராஜன் தம்பியையா தரணிசிங்கு ராஜன்
அண்ணனுந் தம்பியும் ஆள்கிறாரையா செஞ்சிக்கோட்டையைத்தான்
சேதமில்லாமல் ஆள்கிறாரையா செஞ்சி கோட்டையைத்தான்
அவருக்குமிஞ்சி யொருவருமில்லை அந்தக் குதிரைஏற
பத்துதிக்கிலு மொருவருமில்லை பாராசாரி ஏற
செஞ்சிராஜரை அழைத்தீரானல் தேசி ஏறிடுவார்
புருஷசிங்கத்தை யழைத்தீரானல் புரவி ஏறிடுவார்.

## டில்லிபாட்சா ஓலையெழுதி தோரணிமகாராஜனை யழைத்தது.

அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் டில்லிப துரைதானும்
கலகலவென்று சிரித்தானையா டில்லிப துரைதானும்
நீயேவாடா நீயேவாடா கணக்கப்பிள்ளை வாடா
ஆயிரங்கணக்கப் பிள்ளைக்குப்பெரிய கணக்கப்பிள்ளை வாரும்
செஞ்சிகோட்டைக்கு ஓலையெழுதும் கணக்கப் பிள்ளையேநீர்
ஆனல்நல்ல தாகட்டுமென்றான் கணக்கப்பிள்ளைதானும்
சலாமையா சலாமையா தோரணி மகாராஜா
டில்லிபதுரையும் ஓலை எழுதுகிறார் தோரணிராஜர்க்கு
என்னிடபேட்டி நீகாணவேணும் என்தன் மகாராஜா
உன்னிடபேட்டி நான்காணவேணும் உயர்ந்த செஞ்சிராஜா

தேசத்துராஜா பேட்டிக்குவந்தார் தெரிசனஞ் செய்தோமே
உன்னிடபேட்டி ஒருநாளும்காணேன் உத்தம ராஜாவே
என்மீதில்தயவு மிருக்குமேயானால் இங்கே வரவேணும்
அந்தப்படியே எழுதிமுடித்தார் அந்த ஓலையிலே
அண்ணுவாடா தம்பிவாடா அர்க்காரு பாப்பையா
ஓலையைக்கொண்டு செஞ்சிக்குப்போடா அர்க்காரு பாப்பையா
செஞ்சிசேதி தெரிந்துவாடா அர்க்காரு பாப்பையா
ஐந்நூறுகாத வழியேயுண்டு அந்தசெஞ்சிக்கு மிதற்கும்
ஐந்நூறுகுதிரை தபால்வையடா அர்க்காரு பாப்பையா
இருபதுநாளையில் சேதிசொல்லடா என்தனுக் காணும்
ஆனல்நல்ல தாகட்டுமென்ருன் அர்க்காரு பாப்பையன்
அங்கிருந்து வெளிப்பட்டானையா அர்க்காரு பாப்பையன்
தபால்மார்க்கமாய் தனியேபோகிருன் அர்க்காரு பாப்பையன்
பத்துநாளையில் பழஞ்செஞ்சிசேர்ந்தான் அர்க்காரு பாப்பையன்
புதுசெஞ்சியி லரசுபண்ணுகிருன் தோணி மகாராஜன்
அரசுமுகத்தில் வந்துநின்ருனே அர்க்காரு பாப்பையன்
முழங்கால்மண்டி போட்டேயவனும் முன்னே சலாம்செய்தான்
பதில்சலாமுங் கொடுத்தானையா தோணி மகாராஜன்
ஓலையைக்கொண்டு கையில்கொடுத்தான் அர்க்காரு பாப்பையன்
ஓலைமுகத்தைக் கண்ணுலேபார்த்தான் தோணி மகாராஜன்
வந்ததூதனை வரிசையாய்ப்பார்த்தான் தோணி மகாராஜன்
எங்கிருந்து இங்குவந்தீர் எனக்குச் சொல்லுமையா
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் அர்க்காரு பாப்பையன்
சலாமையா சலாமையா தோணி மகாராஜா
டில்லியிலிருந்து வந்தேனையா தோணி மகாராஜா
பாட்சாவுனக்கு ஓலையெழுதினுர் பாரும் ஐயாவே
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் தோணி மகாராஜன்
தம்பிவாடா தம்பிவாடா தாணிசிங்கு ராஜா
டில்லியிலிருந்து சேதிவந்தது தாணிசிங்கு ராஜா
ஓலையைப்பிரித்து சேதிசொல்லும் தாணிசிங்கு ராஜா
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் தாணிசிங்கு ராஜன்

ஓலையைப்பிரித்து வாசித்துப்பார்த்தான் தரணிசிங்கு ராஜன்
டில்லிசேதியைத் தெரியச்சொன்னன் தரணிசிங்கு ராஜன்
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் தோரணி மகாராஜன்
கலகலவென்று சிரித்தானையா தோரணி மகாராஜன்
அண்ணுவாடா தம்பிவாடா மந்திரி துரைமாரே
டில்லிபாட்சாவைக் காணப்போகிறேன் மந்திரி துரைமாரே
ஆயிரங்குதிரைத் தபால்வையுமையா மந்திரி துரைமாரே
அன்றுடஞ்சேதி யடிக்கடியெழுதும் மந்திரி துரைமாரே
என்னிடசேதி யெழுதியனுப்புகிறேன் என்தன் மந்திரிமாரே
அந்தப்பேச்சை காதிலேகேட்டார் அந்த மந்திரிமாரும்
ஆனல்நல்ல தாகட்டுமென்றார் அந்த மந்திரிமாரும்

## தோரணிமகாராஜன் மனைவியிடத்திற்குப்போய் விடைபெற்றுக்கொள்ளுதல்.

அரசுகடந்து அரண்மனைபோனர் அண்ணனும் தம்பியுமாய்
இராணிவசத்தில் நடந்தாரையா நல்ல துரைமார்கள்
தோரணிராஜன் பெண்சாதியையா தெய்வ ராம்பாயி
பத்துமாதம் கர்ப்பமையா பத்ம ராம்பாயி
பூரணகர்ப்ப மானளையா புண்ணிய ராம்பாயி
புருஷனைக் கண்டு பூசைபண்ணினள் புண்ணிய ராம்பாயி
பெண்சாதி முகத்தைக் கண்ணலேகண்டான் தோரணி மகாராஜன்
மனதுகலங்கி எதிரிலேநின்றன் வந்த மகாராஜன்
பெண்ணேகேளும் பெண்ணேகேளும் புண்ணிய ராம்பாயி
நான்போய்வாறேன் நான்போய்வாறேன் புண்ணிய ராம்பாயி
டில்லியிலிருந்து சேதிவந்தது தெய்வ ராம்பாயி
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டாள் அந்த ராம்பாயி
இன்றோநாளையோ கர்ப்பமென்று இருக்குது என்துரையே
என்னைவிட்டுநீ யெப்படிபோவீர் என்பிராண நாதா
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் தோரணி மகாராஜன்
பெண்சாதிமுகத்தைப் பெருமையாய்ப் பார்த்தான்தோரணிமகாராஜன்
பெண்ணேகேளும் பெண்ணேகேளும் புண்ணிய ராம்பாயி

சடுதியிலென்னை வரவேயெழுதினான் தகத்துமகா ராஜன்
சீக்கிரம்என்னை வரவேயெழுதினான் டில்லிமகா ராஜன்
போகாதேபோனால் பிழைகள்வருமே புண்ணிய ராம்பாயி
மூன்றுமாதத்திலே வந்து சேருகிறேன் முத்து ராம்பாயி
ஒன்றுக்குமஞ்ச வேண்டாம்பெண்ணே உத்தம ராம்பாயி
தோழியுநீயும் சுகமாயிருங்கள் சொகுசு ராம்பாயி
பாங்கியும்நீயும் பதனமாயிருங்கள் பத்ம ராம்பாயி
நான்போனவுடனே ஓலையெழுதுகிறேன் பொன்னு ராம்பாயி
இவ்விடஞ்சேதி யெனக்குத்தெரியநீ யெழுது பெண்மயிலே
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டாள் அந்த ராம்பாயி
போய்விட்டுவாரும் போய்விட்டுவாரும் புருஷ சிங்கமேநீர்

## தேரணிமகாராஜன் டில்லிபட்டணம்வந்து டில்லிபதுரையைக்கண்டது.

ஆனால்நல்ல தாகட்டுமென்று அப்புறம்தா னடந்தார்
செஞ்சியைவிட்டுப் புறப்பட்டானையா தேரணி மகாராஜன்
அண்ணனுந்தம்பியுங் கூடநடந்தார் அந்த தேசம்விட்டு
தபால்மார்க்கமாய் வாராரையா தம்பியு மண்ணனுமாய்
அதற்குமுன்னமே யெழுதிவிட்டார்கள் அந்தந்த தேசத்திற்கு
தேசராஜர்கள் வரவேயெழுதினான் டில்லிப துரைதானும்
ஐம்பத்தாறு தேசராஜர்கள் அடங்கலும் வந்தார்கள்
சுற்றிலுமிருந்த ராஜதுரைகள் சூழவே வந்தார்கள்
டில்லிபட்டண முழுதிலும்ராஜர் சூழ விருந்தார்கள்
கொலுநிறைந்து இருந்தாரையா செஞ்சி துரைமார்கள்
டில்லியைத்தேடி வாராரையா கோடி துரைமார்கள்
வரிசையாகவே டில்லிபட்டணம் வந்து புகுந்தார்கள்
டில்லிதகத்தின் முன்னேவந்தான் தேரணி மகாராஜன்
முழங்கால்மண்டி போட்டேயவனும் முன்னே சலாம்செய்தான்
பதில்சலாமுங் கொடுத்தானையா டில்லிப துரைதானும்
வந்தராஜனைக் கண்ணாலேகண்டு வாரும் வாருமென்றார்
சிம்மாசனத்தி லிருமென்றானே டில்லி மகாராஜன்

சிம்மாசனத்தி லுட்கார்ந்தாரையா தோணி மகாராஜன்
அந்தநாழிகைக்கு யோசித்தானும் டில்லிப துரைதானும்
அண்ணமாரே தம்பிமாரே ராஜ துரைமாரே
நானொருபேச்சு சொல்லுகிறேன்கேளும் ராஜ துரைமாரே
உலகத்திலில்லாத குதிரையென்னண்டை திசைதப்பி வந்தது
ஐம்பத்தாறு தேசத்துராஜாக்கள் அடங்கலும் வந்தார்கள்
குதிரைசவாரி செய்யவேண்டும் கோடி துரைமாரே
புரவியுமக்கு இனுங்கொடுக்கிறேன் புண்ணிய துரைமாரே
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டார் அந்த துரைமார்கள்
ஆனுல்நல்ல தாகட்டுமென்று அனைவரும் தாமெழுந்தார்
தோணிராஜ னேறுகிறேனென்று திடுக்கிட்டு தானெழுந்தான்
ஏறுகிறோமென்று தைரியமாக எல்லோருந் தானெழுந்தார்
சந்தோஷமாக எழுந்தாராஜரை தைரியமாய்ப் பார்த்தான்
கலகலவென்று சிரித்தானையா டில்லிப துரைதானும்
இன்னொருபேச்சு சொல்லுகிறேன்கேளும் என்தன் துரைமாரே
புரவியைக்கண்டு பயப்பட்டீரானுல் பிடித்துக்கொள்வேனுன்
தேசியைக்கண்டு பயப்பட்டீரானுல் சிறையில் போடுவேநான்
இந்தப்படி சம்மதியிருந்தால் எல்லோரும் வாருமென்ருன்
ஆனுல்நல்ல தாகட்டுமென்று அனைவருந் தாமெழுந்தார்
சந்தோஷமாக வெளியேவந்தார் சகல தேசத்தாரும்
சிம்மாதனம்விட்டுக் கீழேகுதித்தான் டில்லி மகாராஜன்
முதல்மந்திரி ராஜலிங்கனும் முன்னே நடந்தானும்
மற்றமந்திரி தந்திரிகளும் கூட நடந்தாராம்
குதிரைக்கொட்டடி வந்துநின்ருர்கள் கோடி துரைமார்கள்
குதிரையைச்சுற்றிப் பார்த்தாரையா கோடி துரைமார்கள்
வந்தாராஜரைக் கண்ணுலேகண்டது வர்ணமேகக் குதிரை
பார்த்தாராஜரைக் கண்ணுலேகண்டது பாராசாரி குதிரை
கடகடகடகட கடகடவென்று கனைத்து குதித்ததுபார்
குதிரைகனைத்த சத்தத்திஞலே தொப்பென்று விழுந்தார்கள
அண்டமிடிந்து விழுந்தாற்போல அலறி விழுந்தார்கள்
கோட்டையிடிந்து விழுந்தாற்போல குப்புற விழுந்தார்கள்

முன்னேயிருந்த ராஜதுரைகள் பிரண்டு விழுந்தார்கள்
பின்னேயிருந்த ராஜதுரைகள் புரண்டு விழுந்தார்கள்
தோணிராஜன் கண்ணாலேகண்டு திகைத் திருந்தானும்
தாணிசிங்கு குதிரையைக்கண்டு தலையைக் குனிந்தானும்
குதிரையைக்கண்டு பெருமூச்செரிந்தார் கோடி துரைமாரும்
தலையைக்குனிந்து எதிரிலேநின்றார் சகல தேசத்தாரும்
எதிரிலேநின்ற ராஜதுரைகளை யேறிட்டுப் பார்த்தானும்
கலகலவென்று சிரித்தானையா டில்லிய துரைதானும்
குதிரையைக்கண்டு விழுந்தசேதி கூவிச் சொல்லுமையா
அந்தவார்த்தையைக் காதில்கேட்டார் அந்த துரைமார்கள்
ஐயாகேளு மையாகேளும் தேசத்து ராஜாவே
ஊரிலிருக்கும் குதிரையென்று ஓடிவந்தோ மையா
தேசத்திலிருக்கும் குதிரையென்று தேடி வந்தோமையா
தெய்வலோகத்து பாராசாரிமேல் தேவர்க ளேறவேணும்
இந்தலோகத்து ராஜரேறினல் இறந்து போய்விடுவார்
தப்பித்தவறி யேறினானல் சிதைந்து போய்விடுவார்
குதிரையைப் பார்த்தால் குடல்நடுங்குது டில்லி மகாராஜா
தேசியைப்பார்த்தால் திக்குமுக்காகுது டில்லி மகாராஜா
பாராசாரியைப் பார்த்தவுடனே பலனு மொடுங்குதுபார்
என்ன ஆக்கினை செய்தாலுநாங்கள் ஏறமாட்டோ மையா
உயிருடன்நாங்கள் தப்பிப்பிழைக்க உத்தாரந் தாருமையா
கோவென்றசத்த மிட்டாரையா கோடி தேசத்தாரும்
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் டில்லி மகாராஜன்

## இராஜாக்கள் குதிரையேருததினல் அவர்களைச் சிறையிலடைத்தல்.

நானொருபேச்சு சொல்லுகிறேன்கேளும் ராஜகோடி துரைமாரே
ஐந்துவருஷ மென்னண்டைநீங்கள் அடிமைசெய்ய வேண்டும்
ஏழுவருஷ மென்னண்டைநீங்கள் இருந்து போகவேணும்
அந்தப்பேச்சை யழித்தீர்களானல் அரசுக் கீனமையா
ஆனல்நல்ல தாகட்டுமென்று அனைவருஞ் சம்மதித்தார்

ஐம்பத்தாறு தேசராஜரும் அனைவருஞ் சம்மதித்தார்
டில்லியில்நடந்த சேதியெல்லாம் தெரிய வெழுதினார்கள்
அந்தந்த தேச ஓலைவந்ததை அறிந்துகொண்டார்கள்

## தேசிங்குராஜன் பிறந்தது.

செஞ்சியில்நடந்த சேதியெல்லாம் தெரியச் சொல்லுகிறேன்கேள்
தோணிராஜன் போனஏழாநாள் செல்வனுந் தான்பிறந்தான்
பட்டணத்தில்பிள்ளை பிறந்தசேதியை பலருமறிந்தார்கள்
பிள்ளைபிறந்ததும் செஞ்சிநகரம் புகழ்ச்சி யடைந்தாகள்
மைந்தன்பிறந்ததும் மந்திரிமாரும் மகிழ்ச்சி யடைந்தார்கள்
குழந்தைபிறந்த நாளிலக்கணம் குறிப்பை யறிந்தார்கள்
குறிப்பறிந்து சந்தோஷமானார் கொலுவு மந்திரிமாரும்
சந்தோஷமாக தானங்கொடுத்தார் சகல தேசத்தார்க்கும்
வண்டியில்சர்க்கரை வைத்துவழங்கினார் வந்த தேசத்தார்க்கு
ஊருபதிகள் பிராமணாளுக்கு உறுதியாய்த் தான்கொடுத்தார்
நல்லநாள்கொண்டு தொட்டிலுமிட்டார் ராஜாவுக் காணும்
தொட்டிலுமிட்டுப் பேருங்கொடுத்தார் தெய்வலோக மறிய
தேசிங்குபால னென்றுசொல்லி திருஷ்டி கழித்தாராம்
தேசிங்குபிறந்த இருபதுநாளில் சேதி வந்ததுபார்
சங்கதியைக்கண்டு திகைத்தழுகிறாள் தெய்வ ராம்பாயி
மந்திரிமாரும் செஞ்சிசனமும் மனது கலங்குகிறார்கள்
அலண்டுபுரண்டு அலறிவிழுந்தாள் அந்த ராம்பாயி
குழந்தைமுகத்தைக் காணாமல்நீர் கொடிய தேசம்போனீர்
மைந்தனழகைக் கண்டுநீரும் மகிழ்ச்சி யடையாமல்
டில்லியில்சேர்ந்து சிறையிலகப்பட்டாய் தேசிகனே சுவாமி
இரங்கர்கிருபை யிப்படியிருந்தால் நானென்ன செய்வேனையா
ஆனால்நல்ல தாகட்டுமென்று அம்மனு மேதுசெய்தாள்
மைந்தன்பிறந்த சேதியெல்லாம் தெரியவே தானெழுதி
தேசிங்குபிறந்த சேதியெல்லாம் தெரியவே தானெழுதி
ஓலையெழுதி யனுப்பினாளையா உத்தமி யம்மாளும்
தோணிராஜனைத் தேடியுமங்கே சேதி வந்ததுபார்

சேதியைக்கேட்டுத் திகைத்துநின்றுரே தேரணி மகாராஜன்
ஓலையைக்கண்டு ஒடுங்கிநின்றுரே தேரணி மகாராஜன்
இரங்கரைநோக்கி விசனமடைந்தான் நல்ல மகாராஜன்
ஆனாலும்நல்ல தாகட்டுமென்று அங்கே தானிருந்தார்
செஞ்சியிற்பிறந்த தேசிங்குபாலன் சேதியைச் சொல்லுகிறேன்கேள்
பாலன்பிறந்த மூன்றுமாதம் பதைத்து விழுந்தானும்
குழந்தைபிறந்த யேழாமாதம் குலுங்கி விழுந்தானும்
தொட்டிலைவிட்டுக் கீழேயிறங்கி துள்ளி விழுந்தானும்
தங்கத்தொட்டிலே யெட்டியுதைத்துத் தரையில் விழுந்தானும்
பத்தாமாதந் தவழ்ந்துநடந்தான் பலரு மறியவேதான்
அன்னம்புசிக்க ஆடையுடுக்க அப்பவே தானறிந்தான்
தாயின்மடியில் வந்துவிளையாடி தகப்பனெங்கே யென்பான்
பள்ளிக்குப்போய் படிக்கவெடுக்கப் பாலனு மறிந்தானும்
கூடயிருக்குந் துரைகளோடு குதிரை யேறிப்போவான்
காடுமலைகள் செடிகளெல்லாம் கலங்க அடிப்பானும்
குதிரையேறிச் சவாரிசெய்து கோட்டையில் வருவானும்
இரங்கரைக்கண்டு பூசைகள்செய்து நாணயமாய் வருவானும்
தாயண்டைவந்து பசிக்குதென்று தள்ளாடி விழுவானும்
தாயாரெடுத்து மடிமீதில்வைத்து சாந்தி கழிப்பாளாம்
முக்கனிசக்கரை பாலமுதுடனே முன்னே ஊட்டுவாளாம்
கொஞ்சிகொஞ்சி சாப்பிடுவானையா குழந்தை தேசிங்கு
சாப்பிட் டிளைப்பாறி வெளியேவந்து சண்டைகள் செய்வானும்
கூடப்படித்த மோவுத்துக்காரனை கூப்பிட் டழைப்பானும்
இருவருங்கூடி குதிரையேறியே எங்குந் திரிவாராம்
காடுமலைகள் செடிகளெல்லாம் கலங்க அடிப்பாராம்
புலிகள்கரடி சிங்கத்தைக்கண்டால் புகுந்து வெட்டுவாராம்
வேட்டையாடி வெளியேவந்து வெற்றிகொண்டோ மென்பார்
சங்கராபரணி கரையிலேவந்து தாண்டிக் குதிப்பாராம்
குதிரையைவிட்டுக் கீழேகுதித்து குஸ்திகள் செய்வாராம்
ஒருவர்க்கொருவ ருயர்ந்தமேடையில் உதம்பியே தான்குதிப்பார்
மலைகளைத்தூக்கி எறிகிறோமென்று வந்து மோதுவார்

சையதுசாகிபை சலாம்செய்து தாண்டிவிழுவார்கள்
மண்டிகள்போட்டு மலைகளைத்தூக்கி வாரியடிப்பாராம்
மலைகளையோங்கிக் குத்தினானால் மருந்துபுகைகவ்வும்
செடிகளையோங்கி குத்தினானால் சிதைந்து முறிந்துபோகும்
பத்துப்பனைமர முயரங்கிளம்பி பல்டி யடிப்பாராம்
மூச்சுப்பிடித்து கிளம்பிவிழுந்தார் மூன்றரைநாழிகை வழியும்
ஆகாயமார்க்கம் அந்தர்பல்டி யடித்து விழுவாராம்
குன்றுகளேறிக் குதித்தாரானால் குதிரை பள்ளமாகும்
பனைமரங்களைத் தூக்கியெடுத்துப் பந்துசெண் டாடுவார்கள்
தேறித்தெளிந்தான் வித்தைகளாடி தேசிங்கு மகிபாலன்
அந்தப்படியே ஐந்துவருஷம் ஆடித் திரிந்தானும்
ஆடியலண்டு கோட்டையில்வந்தான் அந்தப் பாலகனும்
தாயண்டை வந்து பசிக்குதென்று தள்ளாடி விழுவானும்
தரியெடுத்து மடியிலேவைத்து சாந்தி கழிப்பாளாம்
முக்கனிசர்க்கரை பாலமுதுடனே முன்னே ஊட்டுவாளாம்
சாப்பிட்டிளைப்பாறி தாயார்முகத்தைத் தனியே பார்ப்பானும்
அம்மாகேளு மம்மாகேளு மென்னைப் பெற்றதாயே
உன்னுடமனதி லென்னவிசனம் ஒளியாமற்சொல்லு மென்றான்
ஊரிலிருக்கும் பிள்ளைகளுக்கு உதவி மெத்தவுண்டு
தாயுந்தகப்பனு மிருக்கிறாம்மா தாயே பெற்றவளே
என்தாயாரிருக்க என்னிடதகப்பன் எங்கே என்றுகேட்டான்
ஜல்தியெனக்குத் தெரியச்சொல்லும் தாயே பெற்றவளே
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டாள் அவனைப்பெற்ற தாயும்
வாரியெடுத்து மடிமீதில்வைத்து மகனை முத்தமிட்டாள்
உச்சிமுகந்து திருஷ்டிகழித்தாள் உத்தமி பெற்றவளும்
கண்ணேமணியே ரத்தினமேஎன் கருவிளமே கேளாய்
ஐம்பத்தாறு தேசராஜர்க்கும் அதிபதி துரைதானும்
டில்லியிலிருக்கும் பெரியபாக்ஷா சேதியனுப்பினாராம்
சேதியறிந்த உன்னிடதகப்பன் தோணி மகாராசன்
தம்பி தாணிசிங்கு ராஜனைத் தனியே யழைத்தாராம்
இருவருங்கூடிப் போனாரையா என்தன் கண்மணியே

போனயிடத்தில் புரவியொன்று புதிதாய் வந்துதாம்
தெய்வலோகத்துப் புரவியேறவே சேதிகள் சொன்னாராம்
ஏறுவோமென்று தைரியமாக எல்லோரும் வந்தாராம்
கண்ணாலேகண்டு டில்லிதுரையும் கடினமாய்ச் சொன்னாராம்
ஏறாமல்போனால் ஏழுவருஷம் இடுவேன்சிறையி லென்றான்
புரவியைப்பார்த்து பயப்பட்டீரானால் போடுவேன்சிறையி லென்
ஆனால்நல்ல தாகட்டுமென்று அனைவருஞ் சொன்னாராம்
அந்தப்படியே சத்தியம்பண்ணி அனைவரும் போனாராம்
குதிரையைச் சுற்றிப் பார்த்தவுடனே பதைத்து விழுந்தாராம்
முன்னேயிருந்த ராஜதுரைகள் மூர்ச்சையா யிருந்தாராம்
பின்னேயிருந்த ராஜதுரைகள் புரண்டு விழுந்தாராம்
மூர்ச்சைதெளிந்த ராஜதுரைகள் முன்னே யோடிவந்தார்
இந்தக்குதிரை யேறினோமானால் இறந்துபோய் விடுவோம்
ஏழுவருஷம் சிறையிலிருந்து எங்களூரு போறோமென்றார்
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் டில்லிப துரைதானும்
ஆனால்நல்ல தாகட்டுமென்று அருஞ்சிறை வைத்தானாம்
ஐந்துவருஷஞ் சென்றதுபாரு அருமையான மகனே
இன்ன மிரண்டுவருஷஞ் சென்றதேயானால் நிமிஷமிருக்கார்கள்
அந்தப்பேச்சு காதில்கேட்டான் அலறுஞ் சிங்கம்போலே
பல்லைப்படபட வென்றுகடித்துப் பதறி யெழுந்தானாம்
கண்கள்நெருப்புப் பொறிகள்பறக்க கனைத்து எழுந்தானாம்
கோபத்தினாலே நெருப்புப்பொறிகள் குப்பென் றெழுந்ததுபார்
தாயைச்சுற்றி வலமாகவந்து சரணங்கள் செய்தானாம்
கும்பிட்டெழுந்து எதிரில்நின்று கூசாமல் சொல்லலுற்றான்
எனக்குநல்ல வாந்தரவேணும் என்னைப் பெற்றதாயே
எட்டுகாளையி லிங்கேவாறேன் என்னைப் பெற்றதாயே
ஜல்தியிலென்னை அனுப்பிவிடவேணுந் தாயே பெற்றவளே
அனுப்புமென்ற சேதிகேட்டு அலறி விழுந்தாளாம்
இனியென்னசெய்வேன் கண்மணியேஎன் றேங்கி விழுந்தாளாம்
போகிறேனென்கிற சேதிகேட்டுப் பூமியில் விழுந்தாளாம்
கைதனைநெரித்து வயிற்றைப்பிசைந்து கண்ணீர் சொரிந்தாளாம்

மகனிடகோபந் தானேயறிந்து மண்மேல் விழுந்தாளாம்
பூமியில்விழுந்து மூர்ச்சையானுள் புண்ணிய ராம்பாயி
இங்கேயிருந்தா லனுப்பமாட்டாள் என்னைப்பெற்ற தாயும்
பூமியில்விழுந்த தாயைப்பார்த்து பின்னிட்டு நடந்தானும்
சங்காபரணியில் ஸ்நானம்பண்ணி சல்தி யோடிவந்தான்
இரங்கர்கோயில் புகுந்தானையா ராஜா தேசிங்கு
இரங்கரைச்சுற்றி வலமாகவந்தான் ராஜா தேசிங்கு
கும்பிட்டெழுந்து எதிரிலே சென்றான் குழந்தை தேசிங்கு
சவாரிசெய்ய டில்லிக்குப்போறேன் சுவாமி ரங்கநாதா
கூடவிருந்து சவாரிசெய்து கொண்டு திருப்புமையா
உன்குழந்தைநா னூருக்குப்போறேன் உடனே வாருமையா
ஜல்திஜல்தி வாருமையா சுவாமி ரங்கநாதா
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டார் ரங்கநாத சுவாமி
ஆனால்நல்ல தாகட்டும்வாறேன் அருமைக் கண்மணியே
போய்விட்டுவாடா போய்விட்டுவாடா புத்தியுள்ள மகனே

## தேசிங்குராஜனும் மோவுத்துக்காரனும் டில்லிபட்டணம் வந்தது.

அந்தப்பேச்சைக் காதிலேகேட்டு அடிபணிந்தானும்
கும்பிட்டெழுந்து வெளியில்வந்தான் குழந்தை தேசிங்கு
மோவுத்துக்காரனைக் கூப்பிட்டழைத்து முன்னே யேதுசொல்வான்
அண்ணாவாடா தம்பிவாடா மோவுத்துக் காரா நீ
தெய்வலோகத்து புரவியொன்று டில்லியி லிருக்குதாம்
பாராசாரி குதிரையொன்று பக்கத்தி லிருக்குதாம்
எனதுதகப்பன் தோரணிராசன் அங்கே யிருக்கிறாம்
குதிரையேறி சவாரிசெய்து கொண்டு வரவேணும்
ஜல்திஜல்தி புறப்படுமென்றான் மோவுத்துக் காரனை
ஆனால்நல்ல தாகட்டுமென்று அதட்டி யெழுந்தானும்
கொட்டடிசென்று குதிரையிரண்டு கொண்டு வந்தானும்
வழிசெலவுக்கு வர்ணலட்சம்பொன் மடியிலே வைத்தானும்
ஜல்தியாகவே கொண்டுநிறுத்தினான் தபால்குதிரைகளை

குதிரையைக்கண்டு சந்தோஷமானான் குழந்தை தேசிங்கு
அரிகரியென் றதட்டியேறினா ரிருவரு மப்போது
ஏறினவுடனே வெள்ளிக்குறடா எடுத்து அடித்தார்கள்
அடித்தவுடனே ஐந்துநாள்பயணம் அதிர நடந்ததுபார்
பத்துநாளையில் வந்துசேர்ந்தார் பால ரிருவருந்தான்
டில்லிசேர்ந்து தெருவில்நடந்தார் தேசிங்கு பாலகனும்
கோட்டைகொத்தளந் தாண்டிவாரான் குழந்தை தேசிங்கு
சிங்காரமாலிலே வந்துசேர்ந்தான் சிங்கக்குட்டி போலே
அந்தவேளையி லென்னசெய்கிறான் டில்லிப துரைதானும்
தங்கத்தகத்தி லிருந்தேயரசு தனியாய் செய்கிறானும்
பொன்னின்தகத்தி லிருந்தேயரசு பெருமையாய்ச் செய்கிறானும்
சுற்றிலுமிருந்த ராஜதுரைகள் சூழ விருந்தார்கள்
நற்புத்தியுள்ள மந்திரிமாரும் நடுவே யிருந்தார்கள்
ஐம்பத்தாறு தேசராஜரும் அருகி லிருந்தார்கள்
சிறையிலிருக்கும் ராஜதுரைகள் சேர விருந்தார்கள்
தோணிராஜன் தாணிசிங்குமே சேர்ந்திருந் தார்கள்
கொலுநிறைந்த ராஜதுரைகள் கொல்லென் றிருந்தார்கள்
அந்தச்சமயம் வந்துநின்றான் அலறுஞ் சிங்கம்போலே
பாலசூரிய னுதித்தாப்போலே பளிச்சென்று சார்ந்தானும்
கோடிசூரிய னுதித்தாப்போலே குப்பென்று சேர்ந்தானும்
வானத்திலிருக்குஞ் சூரியனைப்போல் வந்து நுழைந்தானும்
கோடிமன்மத னறையிலிருந்து கொலுவில் வந்தாற்போல்
நிறைந்த கொலுவிலிருக்கும் ராஜதுரைகள் சட்டென் றெழுந்தாராம்
தகத்திலிருக்கும் டில்லிபதுரையும் தானு மெழுந்தானும்
எழுந்த ராஜரைக் கண்ணாலேகண்டான் ராஜா தேசிங்கு

## தேசிங்குராஜனும் மோவுத்துக்காரனும் டில்லிபதுரையைக் கண்டது.

சலாமையா சலாமையா டில்லிப துரையேகேள்
உன்தேசத்தி லுயர்ந்தபுரவி யுன்னண்டை யிருக்குதாம்
பாராசாரியை சவாரிசெய்ய பாலன்வந்தே னென்றான்

ஏறிசவாரி செய்வதற்காக இங்கேவந்தே னென்றான்
புரவியேறி சவாரிசெய்துநான் போகவேணு மென்றான்
வானமிடிந்து விழுந்தாற்போலே மைந்தன்சொல்லிநின்றான்
அண்டமிடிந்து விழுந்தாற்போலே அவனுஞ் சொல்லிநின்றான்
சொன்னசொல்லைக் காதில்கேட்டான் டில்லிப துரைதானும்
சுற்றிலுமிருந்த ராஜதுரைகளைச் சுற்றியே பார்த்தானும்
சித்திரப்பதுமை போலேயிருக்கிறார் தேச ராஜரெல்லாம்
ஒருவர்முகத்தை யொருவர்பார்த்தே ஒதுங்கி யிருந்தார்கள்
டில்லிபதுரையுங் கண்ணாலேகண்டு சேதி சொல்லலுற்றான்
எதிரிலிருக்கும் தேசிங்குபாலனை யேறிட்டுப் பார்த்தானும்
மன்மதன்போ லழகுகுழந்தையை மண்மேற் பார்த்தானும்

## டில்லிபதுரை தேசிங்குராஜனுடைய வளப்பத்தைக்கேட்டல்.

ஐயாகேளு மையாகேளும் அறியாத பாலகனே
எந்ததேசத்தி லிருந்துநீயும் தேடி வந்தாயப்பா
உன்தனூரும் பேரும்நாடு முன்தகப்பன் பேரும்
நலமாய்பெற்ற தாயின்பேரும் சடுதியில் சொல்லுமென்றான்
அந்தவார்த்தை காதில்கேட்டான் அலறுஞ் சிங்கம்போல்
சொல்லுகிறேன்கேளும் சொல்லுகிறேன்கேளும் டில்லிப துரையேநீ
தெற்கேவெகுதூர மிருக்குதுபாரு செஞ்சிகோட்டை நகரம்
செஞ்சிகோட்டை யாளுமரசன் தோரணி மகாராஜன்
தோரணிமகாராஜன் குமாரன் நான்தான் தேசிங்குமகிபாலன்
சிற்றப்பதுரை தரணிசிங்குமே சிறையி லிருக்கிறாராம்
குதிரையேற வலிவில்லாமல் கொலுவி லிருக்கிறாராம்
குதிரையேறி சவாரிசெய்துநான் கொண்டுபோக வந்தேன்
ஜல்திஜல்தி குதிரைகொண்டுவா டில்லிப துரையேநீ
கொல்லுஞ்சிங்கக் குட்டிபோலே சீறியே நின்றானும்
அந்தசொல்லைக் காதிலேகேட்டான் டில்லி மகாராஜன்
தோரணிராஜன் காதிலேகேட்டு தேடியே வந்தானும்
சிற்றப்பதுரை தரணிசிங்குமே தேடி ஓடிவந்தார்

வாரியெடுத்து மடிமீதில்வைத்து மகனை முத்தமிட்டார்
சந்தோஷமாக தடவியெடுத்து சாந்தி கழித்தாராம்
சேர்த்துத்தழுவி மகனையெடுத்து திருஷ்டி கழித்தாராம்
ஐம்பத்தாறு தேசராசர்கள் அதிசயப் பட்டாராம்
டில்லிபதுவையுஞ் சந்தோஷமாக சேர வோடிவந்தார்
கண்ணேமணியே ரத்தினமேயென் கருவிளமே கேளாய்
என்மகனைக் கண்டுநானும் மகிழ்ச்சி யடையாமல்
உன்தன்சொல்லைக் கேட்டுநானும் உள்ள மகிழ்ந்தேனே
பெற்றதாயு முன்னைப்பிரிந்து பின்னுயிர் வைப்பாளா
அரசனைக்கேட்டு செஞ்சிக்குப்போவோம் அருமைக் கண்மணியே
மனுவுகேட்டு வருகிறேனப்பா வாரும் குழந்தையென்றான்
அந்தப்பேச்சை காதிலேகேட்டான் அழகு பாலகனும்
கலகலவென்று சிரித்தெழுந்தான் கதும்புஞ் சிங்கம்போல்
ஐயாகேளு மையாகேளு மென்னைப் பெற்ற ராஜாவே
குதிரையைப்பார்த்து பயப்பட்டுநீங்கள் கொடிய சிறையிருந்தீர்
பாராசாரியைப் பார்த்துபயந்து பார சிறையிருந்தீர்
ஏறிசவாரி செய்து நானுமே இட்டு போகிறேன்பார்
குதிரையேறி சவாரிசெய்துநான் கொண்டுபோவே னென்றான்
சற்றுநேரத்தில் சவாரிசெய்து சிறைமீட்டுப் போறேன்
போகாமற்போனு லுன்வயிற்றில் பிறந்த தென்னத்திற்கு
அந்தவார்த்தையைக் காதிலேகேட்டு அலறி விழுந்தாராம்

## தேசிங்குராஜன் குதிரையேறுதல்.

கனைத்துக்கதும்பி வெளியிலே வந்தான் காளைசிங்கம்போலே
குதிரையிருக்குங் கொட்டடிதேடி குதித் தோடிவந்தான்
ஓடிவருகிற ராஜனைக்கண்டு உதும்பி யெழுந்ததுபார்
அண்டமிடிந்து விழுந்தாற்போல அலறிக் கனைத்ததுபார்
கோட்டையிடிந்து விழுந்தாற்போலே குலுங்கக் கனைத்ததுபார்
நாற்றிசையிலுங் கலங்கியங்கே நடுங்கிக் கொண்டதுபார்
ஐம்பத்தாறு தேசராஜர்கள் அதிர்ந்து விழுந்தார்கள்
குழந்தைகுழந்தை யென்றுசொல்லி கூவி யழுதார்கள்

டில்லிபதுரையும் தோணிராஜனுந் திகைத்து விழுந்தார்கள்
விழுந்தவுடனே குழந்தையென்று தேடியே வாரார்கள்
கனைத்த குதிரையைக் கண்ணாலேகண்டு கடுகஓடிவந்தான்
குதிரையைத்தட்டி சலாம்வாங்கினன் சொல்லுஞ் சிங்கம்போலே
அண்ணாவாடா தம்பிவாடா மோவுத்துக் காரா நீ
கால்கயிற்றைக் கழுத்துக்கயிற்றை கடுக அவிழுமென்றான்
அந்தச்சொல்லைக் காதிலேகேட்டான் மோவுத்துக் காரனும்
சொன்னவுடனே ஜல்தியாய்ப்பாய்ந்து சுருக்கா எழுந்தானும்
தங்கத்தாலே ஜீனிபோட்டுத் தடவிக் கொடுத்தானும்
அந்தக்குதிரையைக் கண்ணாலேகண்டு அகமுங் குழைந்தானும்
அரிபரந் தாமாவென்று அலறி யெழுந்தானும்
கோவிந்தா ஸ்ரீகிருஷ்ணாவென்று கும்பிட் டெழுந்தானும்
பாராசாரியைச் சலாம்வாங்கிப் பாய்ந் தேறினானும்
புலிகுட்டிபோலே பாய்ந்தவனும் புரவி யேறினானும்
ஏறினவுடனே பாராசாரியு மென்ன செய்யுதுபார்
தடதடதடதட தடதடவென்று தவிக்குதுபார் குதிரை
கிடகிடகிடகிட கிடகிடவென்று கிளம்பி குதித்ததுபார்
லகானையிழுத்து கையிலேபிடித்தான் ராஜா தேசிங்கு
ஐயாகேளு மையாகேளு மென்னைப் பெற்றவரே
புரவியேறி சவாரிபோறேன் பெற்றவரே ஐயா
தப்பித்தவறி வந்தேனானால் தழுவிக் கொள்ளுமையா
இன்றைக்குஞ்சாவு நாளைக்குஞ்சாவு இருக்குது தலைமேலே
ஒன்றுக்குமினீ அஞ்சவேண்டாம் உறுதி கொள்ளுவீரே
சொன்னசொல்லைக் காதிலேகேட்டார் தேச ராஜாக்கள்
ஐம்பத்தாறு தேசராஜரு மடங்கலுங் கேட்டார்கள்
மகனேயென்ன செய்வோமென்று வயிற்றைப் பிசைந்தார்கள்
போகாதே போகாதேமகனே புரவி கொண்டுபோமே
இந்தலோகத்துப் புரவியல்லவே என்தன் கண்மணியே
தெய்வுலோகத்துப் புரவியாச்சுதே என்தன் கண்மணியே
உயிருடனுன்னை விட்டுப்பிரிந்திவ் வுலகத்தி லிருப்போமோ
பிறந்தபோதே யிறந்துபோனால் பெரிய துக்கமில்லை

ஐந்துவருஷம் வளர்த்தமாதா அலைந்துமே போவாள்
குதிரையைவிட்டு குதித்துவாடா குழந்தை யென்மகனே
என்னுயிர்பூமியில் தரித்திருக்க யிறங்கிவா சுதனே
அந்தமொழியைக் காதிலேகேட்டா னதிரூப தேசிங்கு
கலகலவென்று சிரித்தானையா கதும்பும் புலிபோலே
இங்கேயிருந்தா லென்கவலை யென்ன வாகுமோதான்
கோவிந்தா கோவிந்தாஎன்று குதிரையைத் தட்டிவிட்டான்
அரிஅரி ஸ்ரீமுகுந்தாவென்று அசுவத்தைத் தட்டிவிட்டான்
தட்டினதட்டில் குதிரைகிளம்பி தரையில் நில்லாமல்
ஆகாயமார்க்கம் வந்துபாயுது அந்தமேகக் குதிரை
சூரியன்போல துலங்குதுபாரும் சொர்ணமேகக் குதிரை
கண்டகண்டதூரம் பார்த்துராஜர்கள் கலங்கி நின்றார்கள்
பாய்கிறகுதிரையைக் கண்ணாலேகண்டு பாதவித் திட்டார்கள்
மேகமண்டல மளாவிவருவதைப் பார்த்தார் தேசிங்கு
லகானையிழுத்து சிமிட்டா கொடுத்தார் ராஜாதேசிங்கு
சிமிட்டாகொடுத்த வேகத்தினாலே சீறிப்பாய்கிறது
கோபம்வந்து மூண்டுகொண்டது ராஜாவுக் கானாலும்
காடுமலைகள் செடிகளெல்லாம் கலங்கி நடுங்கிடவே
மலைகளிடிந்து தவிடுபொடியாய் மண்மேல் விழுந்திடவே
குன்றுமலைகள் தாண்டிக்குதிரை குதித்தேறிப் போகுதாம்
குன்றுகளெல்லாம் பொடிபொடியாக குலுங்கி விழுந்ததுபார்
குதிரைபோகும் வேகத்தாலே குன்று மலைகளெல்லாம்
குப்பென்று ஐங்காதவழியும் கொண்டு போகிறதாம்
ஆறுகுளங்கள் மடுக்களெல்லா மதிர நடக்குதுபார்
ஐங்காதவழிக்கு மப்புறமிருக்குது அந்தமேகக் குதிரை
குதிரைதட்டின வேகத்தாலே குழந்தை தேசிங்கு
குலுங்கநகைத்து சிமிட்டாகொடுத்தான் குதிரைக் கானாலும்
நிமிஷநாழிகைக்கு ஐந்நூறுகாதம் நிலையாய் பறக்குதுபார்
ஊரைச்சார்ந்த காடுமலைகள் ஒடுங்கி நடுங்குதுபார்
குன்றிலிருக்கும் சிங்கம்யானை குலுங்கி நடுங்குதுபார்
தேசத்திலிருக்கும் ஜனங்களெல்லாம் திரண்டு நடுங்குதுபார்

ஐந்நூறுகாதம் பஞ்சப்புரவி ஆகாயம் போகுதுபார்
அசுவம்போகும் வேகத்தாலே அலையு துலகமெல்லாம்
மேகங்கிளம்பி வாயைத்திறந்து மின்னல் கக்குதுபார்
மின்னல்வெளிச்சந் தன்னிற்பாயுது வேகமான குதிரை
தேவர்களெல்லாம் மனதுபயந்து திகைத் திருந்தார்கள்
இந்தவிடத்தை விட்டேயவர்க ளிறங்கி யோடிவிட்டார்
உயர்ந்தமண்டலம் போட்டேயவர்கள் ஒதுங்கி யோடினார்கள்
வடக்கேவெகுதூரம் மகமேருசால் வந்து பாய்ந்ததுபார்
குதிரைபோகும் வேகத்தாற்பூமி குலுங்க நகைத்ததுபார்
பர்வதங்கள் படபடவென்று பதறி நடுங்குதுபார்
அங்கிருந்தே குதிரையைத்திருப்பினு னந்த பாலகனும்
தெற்குமைநாக பர்வதத்தை தேடி யோடுதுபார்
லங்கையைநான்கு சுற்றுகத்தா னடத்திக் கொண்டுவாருன்
பூமியிலுள்ள ஜந்துகளெல்லாம் பொறி கலங்குதுபார்
வானத்திலிருக்கும் மேக பந்திகள் மதிமயங்குதுபார்
மேற்கே வெகுதூரம்கிளம்பி மேலண்டைகொண்டு வாருன்
ஐந்துநாளு மிராப்பகலாக அதிரவே கொண்டுவாருன்

## குதிரை தேசிங்குராஜனை மோசஞ்செய்தது.

பாராசாரி மனதுகலங்கி பார்த்து நிமிர்ந்ததுபார்
என்னுயிர்வாங்க இந்தப்பாலகன் எங்கே ஜென்மித்தானே
இங்கேயிருந்தா லிரண்டுநாழியி லிறக்க வடிப்பானே
பூமியிலிருந்தால் ஜீவனிப்போ போய்விடுமே பிரிந்து
உற்பாதபிண்டம் தேசிங்குபாலன் ஓட்டிக் கொல்வானே
ஜிவ்வென்றெழும்பி பாராசாரியும் தெய்வலோகம் போகுதுபார்
ஆகாயமார்க்க மட்டுங்கிளம்பி போகுதந்தக் குதிரை
புரவிபோகும் வேகமறிந்தான் புலிக்குட்டி தேசிங்கு
தெய்வலோகந் தன்னிலடக்கத் தேடி போகுதென்று
லகானிழுத்து சிமிட்டாகொடுத்தான் ராஜா தேசிங்கு
இடதுகாலுக் கிரண்டுசிமிட்டா யிடுக்கிக் கொடுத்தானும்
சிமிட்டாகொடுத்த வேகத்தினுலே திகைத்து நின்றதுபார்

இடித்தபிடியில் மனதுகலங்கி யிருந்துமே ஆடுதுபார்
ஆகாயமார்க்கந் தத்தளிக்குது அந்த மேகக்குதிரை
அந்தநாட்டை யிந்தநாட்டை அசையாமலே பிடித்து
நாலுதிக்குந் திரும்பிப்பார்த்தான் ராஜா தேசிங்கு
ஊருபதிகள் நாடுகளெல்லாம் ஒன்றுந் தெரியவில்லை
அன்னம்புசித் தைந்துநாளாயிற்று அறியாத பாலகனும்
ஆகாயம்பூமி ஒன்றுயிருப்பதை அறிந்தான் பாலகனும்
கனைகள்வந்து சூழ்ந்தவுடனே கண்டுமே ஏதுசொல்வான்
கடிவாளக்கயிற்றை கெட்டியாய்ப்பிடித்து கவிழ்ந்து படுப்பானும்
குதிரைக்கயிற்றை கெட்டியாய்ப்பிடித்துக் குப்புறப் படுத்தானும்

## தேசிங்குராஜன் ஸ்ரீரங்கநாதரை நினைத்தல்.

அரிகரிபரந் தாமாவென்று அலறி யழுதானும்
கோவிந்தா ஸ்ரீ கிருஷ்ணாவென்று கூப்பிட் டெழுந்தானும்
ஆபத்பாந்தவா அனாதரட்சகா ஆதிமூலப் பொருளே
அடியேனைவந்து ரட்சியுமையா ரங்கநாதா வென்று
அலறியழுது கவிழ்ந்துபடுத்தான் அந்தக் குதிரைமீதில்
கண்ணைமூடிக் கவிழ்ந்துபடுத்தான் ராஜா தேசிங்கு

## ஸ்ரீரங்கநாதர் தேசிங்குராஜனிடத்தில் வந்தது.

அழுதவுடனே ஸ்ரீரங்கநாதர் அருகில் வந்துநின்று
கடிவாளத்தின் கயிற்றைப்பிடித்து கன்னத்தி லறைந்தாராம்
குழந்தையைக்கொண்டு ஆகாயமார்க்கங் கொல்ல நினைத்தாயே
இன்றையவரையி லாகாயமார்க்கம் எழும்பிப் போகவேண்டாம்
கூடவிருந்து தேசிங்குபாலனை கொலுவில் கொண்டுவாரும்
கொஞ்சநாளையில் சண்டைநேரும் குழந்தைக் காணும்
சண்டைமுனையில் மோட்சமுனக்கு ஜல்தி தாறேனென்றார்
குழந்தையுடனே மோட்சமுனக்குக் கூடத் தாறேனென்றார்
அந்தமொழியைக் காதிலேகேட்டு அடிபணிந் தாராம்
சந்தோஷமாக ராஜனைக்கண்டு சாஷ்டாங்க மாகுதுபார்
சேதிகள்சொல்லி ஆகாயமார்க்கஞ் சேரக் கொண்டுவந்தார்
டில்லிக்குநேரே கொண்டுநிறுத்தினான் தேசிங்கு பாலகனை

குழந்தையையெடுத்து குதிரைமீதில் கூசாமல் வைத்தாராம்
அஸ்தம்படவே களைகள்தெளிந்து அதட்டி எழுந்தானும்
களைகள்தெளிந்து கண்ணைவிழித்துக் கர்த்தனைப் பார்த்தானும்
பார்த்தவுடனே ஆனந்தமாகப் பதறி யழுதானும்
ஆப்த்பாந்தவா அனுதாட்சகா ஆதி மூலமேநீ
அடியேனைவந்து ரட்சித்தீரே ஐயா ரங்கநாதா
இனிநடக்கும் புத்திஎன்னமோ எனக்குச் சொல்லுமையா
அந்தவார்த்தையைக் காதிலேகேட்டார் ரங்கநாத சுவாமி
கண்ணேமணியே ரத்தினமேயென் கருவிளமே கேளாய்
டில்லிக்குநேரே யிருக்குதுபாரு தெய்வலோகப் புரவி
குதிரையிறங்கி சந்தோஷமாகக் கோட்டைக்கு வாருமென்றார்
போய்வாரேனிப்போ போய்வாரேனிப்போ புத்தியுள்ள மகனே
ஆனால்நல்ல தாகட்டுமென்று அடிபணிந் தானும்
பணிந்தவுடனே மாயமாய் ரங்கர் பாவியிருந்தாராம்

## தேசிங்குராஜன் குதிரையை டில்லியிற்கொண்டு வந்திறக்கியது.

போனவுடனே தேசிங்குபாலன் புரவியையென்ன செய்தான்
மெள்ளசிமிட்டா கொடுத்துக்கொண்டு மெதுவாய் வாரானே
பக்கஞ்சிமிட்டா கொடுத்துக்கொண்டு பாலன் வாரானே
கலகலகலகல கலகலவென்று கனைத்து வருகுதுபார்
கனைத்தசத்தத்தை காதிலேகேட்டார் கன்னட தேசத்தாரும்
ஐம்பத்தாறு தேசராஜரும் ஆகாயமே பார்த்தார்கள்
சூரியனைப்போற் றுலங்கிவருகுது சொர்ணமேகக் குதிரை
சந்திரனைப்போல் தகதகவென்ன சாரி வருகுதுபார்
வருகிறபாலனைக் கண்ணால்கண்டு மகிழ்ச்சி யடைந்தார்கள்
தேரணிராஜனும் டில்லிபதுரையுந் தேடிஓடி வந்தார்கள்
ஆனந்தக்கண்ணீர் புட்பமாரியாய் அலறி யழுதார்கள்
சந்தோஷம்வந்து மூண்டுகொண்டது சகல தேசத்தார்க்கும்
அந்தச்சமயத்தில் வந்துநிறுத்தினான் அந்தப பாலகனும்
பாராசாரியைக் கொண்டுநிறுத்தினான் பால சூரியன்போல்

நிறுத்தினவுடனே புட்பமாரிகள் நிலையாய்ப் பொழிந்தாராம்
தேவர்களெல்லாஞ் சந்தோஷமாக தேன்மாரி பொழிந்தாராம்
தேரணிராஜனும் தரணிசிங்குமே தேடி யோடிவந்தார்
வந்தமகனைக் கண்ணாலேகண்டு வாரி யெடுத்தாராம்
வாரியெடுத்து மடிமீதில்வைத்து மகனை முத்தமிட்டார்
தேசிங்குபாலனை மடிமீதில்வைத்து திருஷ்டி கழித்தாராம்
சந்தோஷமாக மகனையெடுத்துச் சாந்தி கழித்தாராம்
ஐம்பத்தாறு தேசாராஜரும் ஆலாத்தி யெடுத்தாராம்
மங்களம்பாடி வாழ்த்திஎடுத்து மைந்தனை முத்தமிட்டார்
டில்லிபதுரையுஞ் தேசாராஜருஞ் சேர வோடிவந்தார்
முழங்கால்மண்டி யிட்டேயவர்கள் முன்னே சலாஞ்செய்தார்
ராமுராமுரே சீதாராமுரே ராஜா தேசிங்கு
பதில்சலாமுங் கொடுத்தானையா பால னெழுந்திருந்து
ஊருங்குடித்தனமு மாகவந்து உவந்து சலாஞ்செய்தார்
கையமர்த்தி மரியாதைசெய்தான் காளை குழந்தையவன்
எல்லோருங்கூடி யாண்மனைவந்தார் ஏக காலத்தில்
குதிரைக்குவேண்டிய புல்லுதண்ணீர் கூசாமல் வைத்தார்
சபையில்வந்து நிறைந்துகொண்டார் சகல தேசத்தாரும்

## டில்லிராஜன் தேசிங்குராஜனுக்கு வெகுமதி கொடுத்தது.

டில்லிபதுரையுந் தேசிங்குராஜனைச் சேர்த்தணைத் தெடுத்து
உயர்ந்தசிம்மா தனத்தில்வைத்து ஒதுங்கிப் பக்கம்நின்றான்
அண்ணாவாடா தம்பிவாடா ராஜலிங்கபாபு
பத்துகளஞ்சிய பணத்தையெடுத்துப் பகுதி கட்டுமென்றான்
குதிரையாயிரம் யானையாயிரம் கொண்டு நிறுத்துமென்றான்
கணக்கில்லாத சேனைதளத்தைக் கடுக நிறுத்துமென்றான்
தேசிங்குக்கேற்ற மாணிக்கவுடுப்பு தேடிக் கொண்டுவாருங்கள்
மாணிக்கமாலை முத்தாரங்கள் வரிசை கொண்டுவாருங்கள்
தெய்வலோகத்து பாராசாரியைத் தேடிக் கொண்டுவாருங்கள்
தேசத்தாருக்கு வெகுமதிசெய்யத் தேடியே கொண்டுவாரும்
நான்ஏறும்புரவி நீலவேணியை தூாத்தி வாருமென்றான்

அந்தவார்த்தையைக் காதிலேகேட்டான் ராஜவிங்க பாபு
சொன்னநாழிக்கு தயாராச்சுது சூழ்ந்த கொலுவினிலே
தயாரானதைக் கண்ணாலேகண்டு டில்லிப துரைதானும்
முத்தாரமும்ரத்னாரமும் முன்னே கழட்டி போட்டார்
தேசிங்குக்கேற்ற வெகுமதிஎல்லாஞ் சேர்த்துக் கொடுத்தானும்
தோரணிராஜன் தாணிசிங்குமே தேடியோடி வந்தானும்
அவரவர்க்கேற்ற வெகுமதியெல்லாஞ் சேர்த்துக் கொடுத்தானும்
ஐம்பத்தாறு தேசராஜர்க்கும் அடங்கலுந் தான்கொடுத்தான்
தேசிங்கருகி லிருக்குமவனே திருஷ்டித்துத் தான்பார்த்தான்
மோவுத்துக்காரனைக் கண்ணாலேகண்டு முன்னே யோடிவந்தான்
முத்தாரங்கள் ரத்னாரங்கள் கழுத்திற் போட்டானும்
அவனுக்கேற்ற வெகுமதியெல்லாம் அங்கே கொண்டுவந்தான்
ஐயாகேளு மையாகேளு மோவுத்துக் காரனே
நர்னேறும்புரவி நீலவேணி நீயேறவேணு மென்றான்
ஐம்பத்தாறு தேசத்திலுள்ள அரசரு மேறமாட்டார்
ஏறினால்நீ யேறவேணும் என்னென்று நீகேளாய்
உன்சூரத்தறிந்து இனமாக உனக்குத் தந்தேனென்றார்
ஆனால்நல்ல தாகட்டுமென்று அவனு மொத்துக்கொண்டான்
தேசிங்குபாலனைக் கண்ணாலேகண்டு சேதி யென்னசொல்லுகிறார்
ஐம்பத்தாறு தேசராஜர்க்கும் அதிபதி நான்றானே
எனக்குமிஞ்சின அதிபதியாக இருந்து அரசுசெய்யும்
என்மகளை ராணியம்மாளை இங்கேதந்தே னென்றான்
கல்யாணஞ்செய்து அரசுமுகத்தைக் காத்துக்கொள்ளு மென்றான்
எப்பொழுதிஷ்டமோ அப்போகல்யாணஞ் செய்துபோ மென்றான்
நீ இட்டவேலையைத் தலையால்செய்ய நிச்சயமாக வையா
அவ்வார்த்தையை காதிற்கேட்டா னறியாத பாலகனும்
கோவிந்தா கோவிந்தாவென்று குப்பென் றெழுந்தானும்
டில்லிபதுரையைச் சேர்த்தணைத்து சேதியென்ன சொல்லுகிறான்
ஐயாகேளு மையாகேளும் டில்லிப துரையேநீர்
சமஸ்தானத்தை அறியாதவனும் தாங்குவேனோ ஐயா
செஞ்சியைவிட்டாறு மாதமாச்சுது செலவுதாரு மையா

அம்மொழியைக் காதிற்கேட்டான் டில்லிப துரைதானும்
வாரியெடுத்து மார்மீதணைத்து வர்ணமுத்த மிட்டான்
அந்தமொழியைக் காதிற்கேட்டான் தேரணி ராஜனும்
ஐயாகேளு மையாகேளும் டில்லிப துரையேநீர்
ஐந்துவருஷப் பாலனுச்சுதே அறியாத பென்குழந்தை
இப்போதுகலியாணஞ் செய்ய எனக்குச் சம்மதியில்லை
இருபதுவயதில் கலியாணஞ்செய்து யிட்டுக்கொண்டு போறேன்
ஆனால்நல்ல தாகட்டுமென்று அவனுமே சம்மதித்தான்
அண்ணுவாடா தம்பிவாடா ராஜலிங்க பாபு
திவ்வியசேனை ஆனைகுதிரை செஞ்சியில்கொண்டு சேரும்
என்றைக்குளு செஞ்சி தோப்புருப்பணமும் யில்லையென்று சொல்லும்
ஐம்பத்தாறு தேசராசர்கள் அனைவரையும் பார்த்து
செஞ்சிராசனால் சிறைமீண்டுபோங்கள் தேச ராசர்களே
போய்வாரோம் போய்வாரோம்நாங்கள் புண்ணிய துரைமாரே

## தேசிங்குராஜன் செஞ்சிகோட்டை வந்து சேர்ந்தது.

தேரணிராசனும் சிற்றப்பதுரையும் தெருவிலே வந்தாரும்
மோவுத்துக்காரனும் நீலவேணிமேல் முன்னே வந்துநின்றான்
அவாவர்களுடைய தேசங்களிலே அவாவர்போய்ச் சேர்ந்தார்
செஞ்சிகோட்டையில் வந்துசேர்ந்தார் தேசிங்கு பாலகனும்
வருகுமுன்னமே சேதியறிந்து வருந்தியே பெற்றவளும்
ஆயிரம்தோழி மார்களுடனே அங்கேவந்து நின்றாள்
வந்தவுடனே தாயைக்கண்டு வணங்கி நமஸ்கரித்தான்
வந்துபணிந்த மகனையெடுத்து வாரியேமுத்த மிட்டாள்
ஆயிரந்தாதிகள் வந்தேமுத்து ஆலாத்தி யெடுத்தார்கள்
திருஷ்டிகழித்து மங்களதிருஷ்டி தெருவி லெறிந்தார்கள்
முக்கனிசர்க்கரை பாலமுதுடனே முன்னே வட்டித்தார்கள்
மகனைஎடுத்து மடிமீதில்வைத்து மகிழ்ச்சி யடைந்தார்கள்
என்னைவிட்டுநீ எப்படிப்போனாய் என்தன் கண்மணியே
போனநா ளன்றையமுதல் புசிப்பெடுத்த தில்லை
தாயுந்தகப்பனு மைந்தனைப்பார்த்து சந்தோஷ மானார்கள்

ஏழுவருஷம் சந்தோஷமாக இருந்தரசு செய்தார்கள்
பட்டங்கட்டி மூன்றுமாதத்தில் பாலனைப் பெற்றவளும்
பரமபதத்தைப் போயடைந்தாள் பாக்கிய ராம்பாயி
தேசிங்குதித்த எட்டாம்வருஷம் தோரணி மகாராஜன்
பரமத்தியானஞ் செய்தேயவரும் பரகதியைச் சேர்ந்தார்
சிற்றப்பதுரை தரணிசிங்கு செஞ்சியை யாண்டிருந்தார்
பதினெட்டுவயது பாலனுன் ராஜா தேசிங்கு
கலியாணஞ்செய்ய வெத்தனித்தார் கண்மணி பாலனுக்கு
சிற்றப்பதுரை தரணிசிங்கு தேடி யென்னசெய்தார்
டில்லிக்குச்சென்று ராணியம்மாளைச் செஞ்சிக்குக் கொண்டுவந்தார்
ஆறுமாதமாய் கலியாணம்பண்ணி அறையில் வைத்தார்கள்
ராணிதேவியைக் கலியாணம்பண்ணி ராஜ முடிதரித்தார்

## தேசிங்குராஜன் திருக்கலியாணஞ் செய்துகொள்ளல்

திரையைக்கட்டி கலியாணஞ்செய்தார் செஞ்சி கோட்டைதனில்
பெண்சாதிமுகத்தைப் பார்த்தறியான் புலிக்குட்டி தேசிங்கு
புருஷன்முகம் பார்த்தறியாள் புண்ணிய ராணியம்மாளும்
இரங்கனைநோக்கி பூசைசெய்தாளாம் ராணி யம்மாளும்
மூன்றேமுக்கால்நாழி பூசைகள்செய்து முழுது மாண்டிருந்தான்
இப்படி பனிரண்டு வருஷம்வரைக்கும் ஏகசக்கா மாண்டான்
செஞ்சிதேசத்தை யாண்டிருந்தான் சிங்கக்குட்டி போல
அந்தமட்டோடே ஆச்சுதுபாரும் அந்த செஞ்சிசேதி

## டில்லிராஜன் நவாப்பினிடத்தில் பகுதிக்கனுப்புதல்.

டில்லியிலிருக்கும் டில்லிபதுரையும் சேதியென்ன சொல்லுவான்
அண்ணுவாடா தம்பிவாடா ராஜலிங்க பாபு
ஐம்பத்தாறு தேசராஜர்களும் பகுதி கட்டுகிறுர்களா
நூற்றெழுபத்திரண்டு பாளையப்பட்டுக்கு எஜமா னுனும்
ஆற்காட்டையாளும் நவாப்புசைதுல்லா அவனுங் கட்டினு
சல்திசல்தி சேதிசொல்லும் ராஜலிங்க பாபு
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் ராஜலிங்க பாபு
முழங்கால்சீலை போட்டேயவனும் முன்னே சலாஞ்செய்தான்

ஐயாகேளு மையாகேளும் டில்லிப துரையேநீ
ஐம்பத்தாறு தேசத்துவேந்தரும் பணமுங் கட்டினார்கள்
ஆற்காட்டையாளும் நவாப்புசைதுல்லா அவனுங் கட்டவில்லை
சலாஞ்செய்து பாட்சாபணத்தை சல்தி கொண்டு வாரேன்
தோப்புருப்பணமும் நிலுவையிருக்குது பழஞ் செஞ்சியிலே
பன்னிரண்டுவருஷந் தோப்புருப்பகுதி பணமுங் கட்டவில்லை
அந்தச்சொல்லைக் காதிலேகேட்டான் டில்லிப துரைதானும்
அண்ணாவாடா தம்பிவாடா கணக்கப்பிள்ளை வாடா
ஆற்காட்டையாளும் நவாப்புசைதுல்லா பணமுங் கட்டவில்லை
ஐயாகேளு மையாகேளு நவாப்பு சைதுல்லா
பன்னிரண்டுவருஷந் தோப்புருப்பகுதி பணமுங் கட்டவில்லை
நூற்றெழுபத்திரண்டு பாளையப்பட்டு உனக்கே யானாலும்
தேசத்துப்பணமும் உன்னிடபணமும் டில்லிக்கு வரவில்லை
எட்டுநாளையி லனுப்பினலாச்சுது இந்தப் பணத்தையெல்லாம்
இல்லாமற்போனால் நவாப்பைப்பிடித்து இடுவேன் சிறையிலென்றாக
சிறையிற்போட்டு மானபங்கஞ்செய் தனுப்புவே னென்றான்
அந்தப்படிக் கெழுதிமுடித்தான் அந்த ஓலையைத்தான்
நீயேவாடா நீயேவாடா அர்க்காரு பாப்பையா
ஐம்பதுபேர் டலாய்த்துமாரை அதிரக் கொண்டுபோயி
அரிக்கத்துபண்ணி பணத்தைவாங்கடா அர்க்காரு பாப்பையா
ஆனால்நல்ல தாகட்டுமென்று அவனு மோடிவாரான்
பத்துநாளையில் ஆற்காடுதேசம் பகுதிகேட்க வந்தான்
சலாமையா சலாமையா நவாப்பு சைதுல்லா
டில்லியிலிருந்து ஓலைவந்தது நவாப்பு சைதுல்லா
வாசித்துப்பார்த்து சேதியெனக்கு வகுத்துச் சொல்லுமென்றான்
அந்தவார்த்தையைக் காதிற்கேட்டு திடுக்கிட் டெழுந்தானும்
டில்லிபேச்சை காதிற்கேட்டு திடுக்கிட் டெழுந்தானும்
அண்ணாவாடா தம்பிவாடா ரங்கநாத பிள்ளை
டில்லியிலிருந்து ஓலைவந்தது ரங்கநாத பிள்ளை
ஓலையைப்பிரித்து வாசித்துச்சொல்லும் ரங்கநாத பிள்ளை
ஆனால்நல்ல தாகட்டுமென்றான் ரங்கநாத பிள்ளை

ஓலையைப்பிரித்து சேதியுரைத்தான் ரங்கநாத பிள்ளை
கேட்டவுடனே மனதுகலங்கி கீழே ஓடிவந்தான்
கஜானாதிறந்து திரவியமெல்லாம் கண்ணாலே தான்கண்டான்
அண்ணாவாடா தம்பிவாடா பங்காரு நாய்க்கரே
கஜாஞ்சியபணமும் டில்லிபணமும் கட்டிப் போடுமேதான்
அதிகமாகுமோ குறையுமோரே அறிந்துசொல்லு மென்றான்
ஐயாகேளு மையாகேளும் நவாப்பு சைதுல்லா
டில்லிபணத்திற் கஜாஞ்சியபணமும் சேனை குறையுதையா
கணக்கைப்பார்த்துத் தோப்புறுப்பணத்தை சல்தியி லழையுமென்றார்
இருபதுநாளில் டில்லிபணத்தை எடுத்தனுப்பு மென்றான்
ஆனால்நல்ல தாகட்டுமென்று அவனு மோடிவந்தான்
ஐயாகேளு மையாகேளும் அர்க்காரு பாப்பையா
கணக்கைசோதித்து டில்லிபணத்தைக் கடுகக் கொண்டுவாறேன்
இருபதுநாளில் பாட்சாபணத்தை எடுத்துக் கொண்டுவாறேன்
அப்படியேபோய் வாரும்சல்தியில் அர்க்காரு பாப்பையா
ஆனால்நல்ல தாகட்டுமென்று அர்க்காரு பாப்பையன்
அந்தமட்டோடே நவாப்புசைதுல்லா அரசு செய்யலுற்றான்
கோபம்பிறந்து சைதுல்லாவும் குரூமா யழைத்தானும்
அண்ணாவாடா தம்பிவாடா பங்காரு நாய்க்கரே
பெரியகணக்கு ரங்கநாதபிள்ளையைப் பிடித்து வாருமென்றானே
நல்லதென்று பங்காருநாய்க்கன் நாடி யோடிவந்தான்
ஜல்திஜல்தி யோடிவாடா ரங்கநாத பிள்ளை
அந்தச்சொல்லைக் காதிலேகேட்டான் ரங்கநாத பிள்ளை
ஸ்நானஞ்செய்து பூஜைமுடித்து சாப்பிட் டிளைப்பாறி
அதிகசந்தோஷங் கொண்டேயிருக்கும் அந்தக் கணக்கப்பிள்ளை
கணக்கையெடுத்து சலாஞ்செய்து கடுக ஓடிவந்தான்
ஐயாகேளு மையாகேளும் ரங்கநாத பிள்ளை
நூற்றெழுபத்திரண்டு பாளையப்பட்டு நமக்கே யானாலும்
பாளையப்பட்டு ராஜதுரைகள் பகுதி கட்டுறார்கள்
நிலுவையொன்று மில்லாதவர்கள் நிலையாய் கட்டுறார்கள்
கட்டாதிருக்கும் ராஜதுரைகளைக் கடுகச் சொல்லுமென்றான்

## இராஜர்கள் பகுதிகட்டும் விபரம்.

தேசத்துராஜ துரைகளேயும் தெரியச்சொல்லு மென்றான்
ஆனால்நல்ல தாகட்டுமென்று அவனு மேதுசொல்வான்
ஐயாகேளு மையாகேளும் நவாப்பு சைதுல்லா
சேத்துப்பட்டு தாவுத்துக்காரனும் திறைபணங் கட்டிவாரான்
திருவண்ணாமலை சுபங்கிதுரையும் திறைபணங் கட்டிவாரான்
கள்ளக்குறிச்சி கானுசாயபு கட்டிவாரான் பணத்தை
மதுரைசீமை மலேயாளத்தானும் வாய்தா கட்டிவாரான்
திண்டுக்கல்லு கொலுமுகத்தானும் திறைபணங் கட்டிவாரான்
அரியலூர் பெரியதுரையும் பணமுங் கட்டிவாரான்
எட்டியாபுரத்து பாளேயக்காரன் பணமுங் கட்டிவாரான்
திமிரிக்கோட்டை ஷேக்குமுகம்மது பணமுங் கட்டிவாரான்
நூற்றெழுபத்திரண்டு பாளேயக்காரரும் பணமுங் கட்டிவாரார்
இன்றையவரைக்குந் தோப்புறுப்பணமும் நிலுவை யொன்றுமில்லே
நானொருமொழி சொல்லுகிறேன்கேள் நவாப்பு சைதுல்லா
செஞ்சிக்கோட்டை யாளுகின்ற தோணி மகாராஜன்
சூரசிங்கு குமாரனேயா தோணி மகாராஜன்
தோணிராஜன் குமாரனேயா தேசிங்கு மகிபாலன்
சிம்மாதனத்தில் அரசுசெய்கிறான் சிங்கக்குட்டி போல
அந்த-செஞ்சியையாளும் தேசிங்குராஜன் பணமுங் கட்டவில்லே
பன்னிரண்டுவருஷந் தோப்புறுப்பணமும் செஞ்சியில் வரவேண்டும்
வாய்தாபணமும் வேறேயிருக்குது பழஞ் செஞ்சியிலே
தோப்புறுப்பணத்துக்குப் போய்வாடாநீ தோன்ற மல்லண்ணா
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் தோன்ற மல்லண்ணன்
நானொருமொழி சொல்லுகிறேன்கேள் நவாப்பு சைதுல்லா
ஒண்டியாய்நான் போகமாட்டேன் நவாப்பு சைதுல்லா
துருப்புகுதிரை மூன்றூறெனக்கு துரிதமாய்த் தரவேணும்
சாரிமூங்கில் சவாரிஜண்டா தரவேணுங் கூடவேதான்
கோபுரவண்டி குலாருவண்டி கூட தரவேணும்
இந்தப்படிக்கு கொடுப்பாயேயானல் நவாப்பு சைதுல்லா

செஞ்சிக்கோட்டைக்கு நான்போய்வாறேன் நவாப்பு சைதுல்லா
போனநாழியிற் செஞ்சிராஜனைப் பிடித்துக் கொண்டுவாறேன்
வாராமற்போனல் செஞ்சிராஜனை மடக்கிக் கொண்டுவாறேன்
கஜானுபணத்தைக் கட்டாமற்போனல் கழுவில் போட்டுவாறேன்
பகுதிப்பணத்தைக் கட்டாமற்போனல் பாரசிறை யிட்டுவாறேன்
சிறையில்வைத்து அரிக்கத்துபண்ணி சேரக் கொண்டுவாறேன்
அந்தப்படிக்கு உத்தாரங்கொடுத்தால் அங்கே போரேனென்றான்
அந்தவார்த்தையைக் காதிலேகேட்டான் நவாப்பு சைதுல்லா
கேட்டபடியே உத்தாரங்கொடுத்தான் நவாப்பு சைதுல்லா
சலாம்வாங்கித் திரும்பினனையா தோன்ற மல்லோஜி
அரண்மனைக்குள்ளே சென்றனந்த தோன்ற மல்லோஜி
ஸ்நானஞ்செய்து சாப்பிட்டானையா தோன்ற மல்லோஜி
தலைக்குத்தலைப்பா போட்டானையா தோன்ற மல்லோஜி
அங்கிவுருமால் போட்டானையா தோன்ற மல்லோஜி

## தோன்றமல்லன் சேஞ்சிக்குப் போகுதல்.

அரண்மனைவிட்டு வெளியேவந்தான் தோன்ற மல்லனும்
அதற்குமுன்னமே தயாராச்சுது பட்டத்து யானையும்
ஆனைகொம்புக்கு கத்திகட்டினன் தோன்ற மல்லோஜி
நாராயணு கோவிந்தாவென்று யானை யேறினனும்
செஞ்சிக்கோட்டைக்குப் பயணமானன் தோன்ற மல்லனும்
கணகணகணகண கணகணவென்று கத்திகள் மின்னுதுபார்
பளபளபளபள பளபளவென்று பட்டாக்கள் மின்னுதுபார்
தடதடதடதட தடதடவென்று குதிரைகள் நடக்குதுபார்
இங்கேயடித்த நகாருசத்தம் திமிரியிற் கேட்குதுபார்

## தோன்றமல்லனை ஷேக்குமுகம்மது காணல்.

அந்தவேளையி லென்னசெய்கிறன் ஷேக்குமுகம்ம தையா
எதிரிளவனே வந்தானென்று ஷேக்கு முகம்மதுவும்
மூந்நூறுகுதிரை தயார்பண்ணினன் ஷேக்கு முகம்மதுவும்
எண்ணூறுதுருப்பு குதிரையுடனே முன்னே யோடிவந்தான்

தோன்றமல்லனைக் கண்ணாலேகண்டான் ஷேக்கு முகம்மதுவும்
பதில்சலாமும் கொடுத்தானையா தோன்ற மல்லனுமே
எங்கேயிருந்து எங்கேபோறீர் தோன்ற மல்லண்ணா
இங்கேவந்த வயணமென்ன தோன்ற மல்லண்ணா
நேற்றையநிலுவை பைசாபணமும் கட்டி யனுப்பினேனான்
இன்றையநிலுவை பைசாபணமும் கட்டப் போகிறேனான்
என்சீமையில் நகாருபோட்ட வயண மென்னவையா
அந்தவார்த்தைக் கென்னசொல்கிறான் தோன்ற மல்லனுமே
சண்டைக்குவரவில்லை சாடிக்குவரவில்லை ஷேக்கு முகம்மதையா
செஞ்சிக்கோட்டை பணத்துக்குப்போறேன் ஷேக்கு முகம்மதையா
அந்தப்பேச்சை காதிலேகேட்டான் ஷேக்கு முகம்மதுமே
நானொருவார்த்தை சொல்கிறேன்கேளும் தோன்ற மல்லண்ணா
அவனுமகா ராஜனையா ராஜா தேசிங்கு
செஞ்சிக்கோட்டைக்கு சிப்பாயையா ராஜா தேசிங்கு
கத்திபிடித்த சிப்பாய்மகனும் ராஜா தேசிங்கு
அவன்-கண்ணையுருட்டிப் பார்த்தானேயாகில் சிப்பாய் தேசிங்கு
கால்பலங்களும் கைபலங்களும் கதறி யோடுமேதான்
டாறுடாறாய்த் தீர்த்துபோடுவான் ராஜா தேசிங்கு
சண்டைபண்ணி ஜெயிக்கமாட்டாய் தோன்ற மல்லண்ணா
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் தோன்ற மல்லோஜி
என்னபேச்சு பேசினையடா ஷேக்கு முகம்மதையா
அவனிடசூரத் தெனக்குத்தெரியும் ஷேக்கு முகம்மதையா
செஞ்சிக்குசென்று என்தன்வலுமையை தெரியக் காண்பிக்கிறேன்
போய்வாறேனான் போய்வாறேனடா ஷேக்கு முகம்மதையா
கட்டியிருந்த குதிரைகளெல்லாம் நடக்குது பாளையமும்
போடுபோடென்று போரானையா தோன்ற மல்லனுமே
ஆரணிகோட்டைக் கிரண்டுநாழிவழியில் நகாரு போட்டானும்
வேங்கடராயர் சீனிவாசராவ் சந்திர மகாராஜாவும்
சதுர்தீர்ந்தே யுட்கார்ந்திருந்தார் மூன்று துரைமாரும்
கார்பார்பண்ணுகிற வேங்கடராயர் காதிலே கேட்டிடவே
யெதிரியெவனோ வந்தானென்று வேங்கட ராயரும்

ஆயிரங்குதிரை தயார்பண்ணினார் வேங்கட ராயரும்
கோட்டையிலிருந்து வெளியேவந்தார் வேங்கட ராயரும்
துருப்பிலுள்ள ஆயிரங்குதிரையைத் தூத்தி ஓடிவந்தார்
தோன்றமல்லனைக் கண்ணாலேகண்டார் வேங்கட ராயரும்
சலாமையா சலாமையா தோன்ற மல்லோஜி
பதில்சலாமுங் கொடுத்தானையா தோன்ற மல்லோஜி
எங்கேயிருந் தெங்கேபோறீர் தோன்ற மல்லோஜி
நீ-இங்கேவந்த வயணமென்ன தோன்ற மல்லோஜி
நேற்றையநிலுவை பைசாபணமும் கட்டி யனுப்பிவைத்தேன்
இன்றையநிலுவை பைசாபணமும் கட்டி யனுப்பிவைத்தேன்
என்சீமையிலே நகாருபோட்ட வயண மென்னவையா
நானொருபேச்சு சொல்கிறேன்கேளும் வேங்கட ராயரே
சண்டைக்குவரவில்லை சாடிக்குவரவில்லை வேங்கட ராயரே
செஞ்சிக்கோட்டை பணத்துக்குபோறேன் வேங்கட ராயரே
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் வேங்கட ராயனும்
நானொருபேச்சு சொல்கிறேன்கேளும் தோன்ற மல்லண்ணா
அவனிடசேதி யெனக்குத்தெரியும் தோன்ற மல்லண்ணா
அவன்பிறந்த ஏழாமாதம் தாயார் சென்றுபோனாள்
தேசிங்குபிறந்த எட்டாம்வருஷம் தகப்பன் சென்றுபோனான்
சிற்றப்பதுரை தரணிசிங்கு எடுத்து வளர்த்தாராம்
பதினெட்டுவயதில் கலியாணம்பண்ணினார் சிற்றப்ப ராஜாவும்
இப்போ-இருபத்திரண்டு வயதுள்ளபாலகன் ராஜா தேசிங்கு
ஐம்பதுதுலாம் பரிசைகத்தி அவனிட கத்தியும்
ஏழுதுலாம் பரிசைபாலா அவன்கை பாலாவும்
அவனுக்கேற்ற தெய்வலோக பாராசாரி குதிரை
பாராசாரிமே லேறினானால் ராஜா தேசிங்கு
பட்டாவுருவி கையிலேபிடித்தால் ராஜா தேசிங்கு
பன்னிருகாதம் பாய்ந்துவெட்டுவான் ராஜா தேசிங்கு
இணையொருவ ரெங்குமில்லை தேசிங்கு முன்னுக்கு
பாற்சமுத்திரம் போலேதுரைகள் படைக ளெதிர்த்தாலும்
பத்துநாளையிற் கண்ணாலேகண்டு பழஞ்செஞ்சி போய்விடுவான்

சிங்கம்போலே வந்துவெட்டுவான் ராஜா தேசிங்கு
புலியைப்போலே புகுந்துவெட்டுவான் ராஜா தேசிங்கு
மாறுமாறென்று தீர்த்துப்போடுவான் ராஜா தேசிங்கு
அவனைஜெயிப்பா ரொருவருமில்லை தோன்ற மல்லண்ணு
சண்டைபண்ணி ஜெயிக்கமாட்டாய் தோன்ற மல்லண்ணு
சமாதானமாய்ப் போகவேணும் தோன்ற மல்லண்ணு
சமாதானத்துக் குட்படமாட்டான் ராஜா தேசிங்கு
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் தோன்ற மல்லனும்
இனியில்லாத பயம்பிடித்தது தோன்ற மல்லனுக்கு
கையுங்காலு முதறலெடுத்து கலங்கி யிருந்தானும்
மனதில்மெத்த விசனங்கொண்டு வாடி யிருந்தானும்
அந்தவேளையி லென்னசொல்கிறுர் வேங்கட ராயரும்
மெத்தசூரத்துக் காரனவனும் ராஜா தேசிங்கு
பணமென்றசேதி காதிலேகேட்டால் பாய்ந்து குத்திடுவான்
சல்-மெத்தகெட்டிக் காரனையா ராஜா தேசிங்கு
அவனும்-விஷ்ணுபக்திக் காரனையா ராஜா தேசிங்கு
இரவும்பகலும் ரங்கநாதரை யெண்ணி யிருப்பவன்தான்
நாமத்தைக்கண்டால் பயப்படுவானையா ராஜா தேசிங்கு
அந்தசேதியைக் காதிலேகேட்டான் தோன்ற மல்லனும்
சந்தோஷமாக வேங்கடராயனைத் தழுவிக் கொண்டானும்
இனிமேலெனக்குப் பயமில்லையென் றிறுமாந்து சொன்னானும்
நாமத்தைபோட்டு செஞ்சிராஜனை நடத்திக் கொண்டுவாறேன்
எந்தவிதமும் செஞ்சிராஜனை யிடுவேன் சிறையிலென்றுன்
ஆற்காடுதேசங் கொண்டேயவனை அடக்கிப் போடுவேன்பார்
செய்யாமற்போனல் எனதுபேரும் தோன்ற மல்லனல்ல
போய்வாறேன் போய்வாறேனனும் வேங்கட ராயரே
கட்டியிருந்த குதிரையெல்லாம் நடந்தது பாளையமும்
போடுபோடென்று போறுனையா தோன்ற மல்லனுமே
செஞ்சிக்கோட்டை மண்ணைமிதித்தான் தோன்ற மல்லனுமே
செஞ்சிக்கோட்டைக்கு ஐக்துநாழிவழி தேவனூர் பேட்டை
தேவனூர்பேட்டை ஓரத்திலே சங்கரா பரணியாறு

ஆற்றங்கரையில் வந்தேயவனும் பாளையம் போட்டானும்
மூன்றும்நாள்வரை சத்துபண்ணுமல் முழித் திருந்தானும்
நாலாம்நாள் காலமேஅங்கே நகாரு போட்டானும்
இங்கேபோட்ட நகாருசத்தம் செஞ்சியிற் கேட்டதுபார்
புதுசெஞ்சியில் பூசைபண்ணுறுன் ராஜா தேசிங்கு
பழஞ்செஞ்சியில் கார்பார்பண்ணுறுர் சிற்றப்ப ராஜாவும்
என்றுமில்லாத நகாருசத்தம் இன்று வந்ததென்ன
அலங்கத்துமே லேறிப்பார்த்தான் சிற்றப்ப ராஜாவும்
ஆற்றங்கரையி னிறைந்திருக்குது நவாப்பு பாளையமும்
கண்ணுலேகண்டு மனதுகலங்கி கடுக யென்னசெய்தான்
ஒற்றைக்குதிரை போட்டுமேயேறி வுடனே யோடிவந்தான்
அந்தவேளையில் பூசைபண்ணுகிறுன் ராஜா தேசிங்கு
அரிநமோ நாராயணுவென்று பூசை பண்ணுறுனும்
கிருஷ்ணு அரி கோவிந்தாவென்று பூசை பண்ணுறுனும்
மாயவா வைகுந்தாவென்று பூசை பண்ணுறுனும்
செஞ்சிக்கோட்டை ஸ்ரீரங்கநாதரை தியானஞ் செய்கிறுனும்
பூசைமுகத்திலே வந்துநின்றுன் சிற்றப்ப ராஜாவும்
என்னபூசை பண்ணிணுயடா மகனே தேசிங்கு
தேவனூரிலே கணகணவென்று நகாரு முழங்குதிப்போ
பாளையம்வந்து நெருங்கியிருக்குது மகனே தேசிங்கு
நாலுமூலேயும் நவாப்புபாளையம் நாடி யிருக்குதுபார்
ஆற்றங்கரையில் நவாப்புசேனையும் அண்டி யிருக்குதுபார்
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் ராஜா தேசிங்கு
கண்ணைவிழித்துப் பார்த்தானையா ராஜா தேசிங்கு
ராமுராமுரே தேவாவுமக்கு சிற்றப்ப ராஜாவே
என்னபேச்சு பேசினீரையா சிற்றப்ப ராஜாவே
கலகலவென்று சிரித்தானையா ராஜா தேசிங்கு
கோபங்கொண்டு நகைத்தவனும் கொல்லுஞ் சிங்கம்போலே
ஐயாகேளு மையாகேளும் சிற்றப்ப ராஜாவே
பன்னிரண்டுவருஷம் தோப்புறுபணமும் நம்மண்டை யிருக்கிறது
நம்மிடகோட்டைக்கு பயமேயில்லே நமக்கே யாருனும்

ராமாராமா வென்றுநாமும் ராஜ்ஜிய மாளுகிறேம்
ராஜகுலத்தில் நானும்பிறந்தேன் ரோஷக் காரனுக
எதிராளியான நவாப்புதண்டு எதிரில் விழுந்ததோதான்
பகையாளியான நவாப்புதண்டு பக்கத்தில் விழுந்ததோதான்
தேசமெல்லாஞ் சேர்ந்துவந்ததோ சிற்றப்ப ராஜாவே
இன்னம்-அரைக்கால்நாழி பொறுத்துக்கொள்ளும் சிற்றப்ப ராஜ
டாறுடாருய்த் தீர்த்துபோடுறேன் சிற்றப்ப ராஜாவே
ஆறிலுஞ்சாவு நூறிலுஞ்சாவு சிற்றப்ப ராஜாவே
பிறந்தவன்றைக்கே சாவிருக்குது சிற்றப்ப ராஜாவே
வந்தவனுமொன்று கேட்டுப்பாரு சிற்றப்ப ராஜாவே
இதற்கோநீயும் பயந்தாயையா சிற்றப்ப ராஜாவே
பூசைமுகத்தைக் கெடுக்கவேண்டாம் சிற்றப்ப ராஜாவே
ஆனால்நல்ல தாகட்டுமென்றுன் சிற்றப்ப ராஜாவும்
அந்தவேளையி லென்னபண்ணுறுன் சிற்றப்ப ராஜாவும்
சிற்றப்பதுரை தாணிசிங்குமே கொலுவுக்கு வாருராம்
இரண்டுபேர் அர்க்காருமாரை தோன்ற மல்லனுக்கு
அஞ்சல்மேலே அஞ்சல்போகுது தோன்ற மல்லனுக்கு
தோன்றமல்லனைக் கிட்டிவந்தார் அர்க்காரு மார்களும்
வந்தவனைத்தன் கண்ணுலேகண்டான் தோன்ற மல்லனுமே
ராமுராமுரே ராமுராமுரே அர்க்கார் மாரேநீர்
என்னைத்தேடி வந்தகாரியம் எனக்குச் சொல்லுமையா
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டார் அர்க்கார் மாருகளும்
எங்களையாளுந் தேசிங்குராஜா உன்னை யழைக்கச்சொன்னுர்
ஜல்திஜல்தி புறப்படுமென்றுர் அர்க்கார் மாருகளும்
இந்தச்சேதியைக் காதிலேகேட்டான் தோன்ற மல்லனும்

## தோன்றமல்லன் தேசிங்குராஜனிடம் வருதல்.

கால்நடுங்கி கைநடுங்கி யானை யேறினுனைம
சுண்ணும்பெடுத்து எச்சிலுமிழ்ந்து நாமத்தைப் போட்டானும்
ஆனையைக்குத்தி இரத்தமெடுத்து நடுவிலே போட்டானும்
பட்டைநாமம் போட்டானையா தோன்ற மல்லனுமே

அந்தவேளையி லென்னபண் ணுறுன் ராஜா தேசிங்கு
பூசைமுழுதும் முடிந்துதையா ராஜாவுக் காணும்
பூசையைவிட்டு வெளியேவந்தான் ராஜா தேசிங்கு
சிங்காரமாலிலே வந்தானையா ராஜா தேசிங்கு
திருமண்பெட்டியைக் கையிலெடுத்தான் ராஜா தேசிங்கு
ராமராமா வென்றுதிருமணை நெற்றியி லிட்டானும்
சரிகையுண்டாசு தலையிலேதரித்தான் ராஜா தேசிங்கு
கலிக்கத்துறு எடுத்துக்கட்டினுன் கரும்பும் சிங்கம்போலே
கமானெடுத்து காலில்போட்டான் ராஜா தேசிங்கு
கைக்குச்சிரா கட்டிக்கொண்டான் ராஜா தேசிங்கு
ஐந்துதுலாம் பரிசைகத்தி கையில் பிடித்தானும்
எமன்போல உட்கார்ந்தானையா ராஜா தேசிங்கு
மன்மதன்போ லுட்கார்ந்தானையா ராஜா தேசிங்கு
அருகிலிருந்த அர்க்காருமாரை யதட்டிக் கூப்பிட்டான்
கூப்பிட்டழைத்து சேதிசொன்னுன் கொல்லுஞ் சிங்கம்போலே

## தேசிங்குராஜன் பாளயப்பட்டாரைக் கொலுவுக்கு வரவழைத்தல்.

ஜெயராமு கெங்காராமை கொலுவுக்கு வரச்சொல்லும்
நத்தர்சிங்கு கோபால்சிங்கை நமதுகொலுவி லழையும்
ராமுசிங்கு லட்சுமணசிங்கை நமதுகொலுவி லழையும்
ராமுதாரி லட்சுமணதாரியை கொலுவுக்கு வரச்சொல்லும்
ராமுசிங்கை தரணிசிங்கை கொலுவுக்கு வரச்சொல்லும்
மான்சிங்கு கிரிபுசிங்கை வரச்சொல்லும் கொலுவினிலே
தரணிடில்லி உசேன்சாயபை கொலுவுக்கு வரச்சொல்லும்
பேட்டைசிப்பாய் மோவுத்துக்காரனை கொலுவுக்கு வரச்சொல்லும்
சிற்றப்பதுரை தரணிசிங்குவை கொலுவுக்கு வரச்சொல்லும்
ஜல்திஜல்தி யென்றுசொன்னுன் ராஜா தேசிங்கு
சொன்னநாழிக்கு நிறைந்தகொலுவில் சூழ வோடிவந்தார்
இந்தவிதமா இருக்குதங்கே செஞ்சி கோட்டைக்குள்ளே
அந்தவேளையி லென்னசெய்கிறுன் தோன்ற மல்லனுமே

யானையைவிட்டுக் கீழேகுதித்தான் தோன்ற மல்லனுமே
நாராயணா கோவிந்தாவென்று கோட்டைக்குள்ளே வந்தான்
சதுர்முன்னுக்கு வந்தானையா தோன்ற மல்லனுமே
முழங்கால்கீலே போட்டேயவனு முன்னே சலாம்செய்தான்
பதில்சலாமும் கொடுத்தானையா ராஜா தேசிங்கு
கண்ணாலேகண்டே தோன்றமல்லனைக் கடுக சொல்லலுற்றான்
நீ-இங்கேவந்த வயணமென்ன தோன்ற மல்லண்ணா
எனக்குஇருபத் திரண்டுவயது இப்போ தாச்சுது
இத்தனைநாளாய் நவாப்புசேனைகள் இங்கே வந்ததில்லை
உயிர்கொடுக்க செஞ்சிகோட்டைக்கு உகந்து வந்தீரோ
தைரியங்கொண்டு செஞ்சிகோட்டைக்கு சார்ந்து வந்தீரோ
என்சீமையில் நகாருபோட என்ன வலுமைகொண்டீர்
ஜல்திஜல்தி சொல்லுமென்றான் ராஜா தேசிங்கு
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் தோன்ற மல்லனுமே
கால்நடுங்கி கைநடுங்கி காலில் விழுந்தானும்
சலாமையா சலாமையா ராஜா தேசிங்கு
நான்-சண்டைக்குவரவில்லை சாடிக்குவரவில்லை ராஜா தேசிங்கு
கோபமில்லாமல் என்னுடபேச்சை சற்றே கேளுமையா
சந்தோஷமாக என்னுடபேச்சை சற்றே கேளுமையா
நூற்றெழுபத்திரண்டு பாளையப்பட்டு நவாப்புக் காணும்
இந்த-செஞ்சிகோட்டை பணமும்வரவில்லை ராஜா தேசிங்கு
தோப்புருப்பணமும் வேறேகிடக்குது பழஞ் செஞ்சியிலே
தோப்புருநிலுவைக்கு வந்தேனையா ராஜா தேசிங்கு
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் சிப்பாய் தேசிங்கு

## தேசிங்கு தோன்றமல்லன்மீது கோபித்தது.

பல்லைப் படபடவென்று கடித்தானையா ராஜா தேசிங்கு
கையைத்தூக்கி கனைத்துதட்டினான் ராஜா தேசிங்கு
இனியில்லாத கோபமாச்சுது ராஜாவுக் காணும்
கோபத்தினால் கட்டியவனைக் கொல்ல வெடுத்தானும்
பார்த்தவுடனே தோன்றமல்லனும் பதைத்து விழுந்தானும்

விழுந்தவுடனே சலாஞ்செய்து வேண்டிக் கொண்டானும்
தலையையசைத்து தோளைநெரித்தான் தாவுஞ் சிங்கம்போலே
கண்களையுருட்டி கதும்பினனையா காளை சிங்கம்போலே
அடா-என்னபேச்சு பேசினையடா தோன்ற மல்லண்ணு
நீவந்தாப்போல் நவாப்புவந்தால் நிமிஷ மிருக்கமாட்டான்
பண்மென்ற சேதி காதில்கேட்டால் பாய்ந்து வெட்டிடுவேன்
நாளைக்குவரும் நவாப்புசாயபை இன்றைக்கு வரச்சொல்லும்
புருஷக்கார னானல்நவாப்பை நொடியில் வரச்சொல்லும்
ஆண்பிள்ளையானல் நவாப்புசாயபை விரலைநீட்டச் சொல்லும்
மீசையுள்ளவ னானல்நவாப்பை விரலைநீட்டச் சொல்லும்
கத்தியெடுக்கிற சிப்பாய்களெல்லாம் தோப்புரு கட்டுகிறதோ
தைரியமுள்ளவ னானல்நவாப்பை சல்தியில் வரச்சொல்லும்
கருவாடுவிற்கிற லப்பையனுக்கு கிஸ்தி கட்டுகிறதோ
கத்திமுனையிலே பணமுந்தாரேன் நவாப்புக் காணும்
பரிசுமுனையிலே பணமுந்தாரேன் நவாப்புக் காணும்
போனவருஷத்துக் கிந்தவருஷம் வரகு விளைந்தது
வரகுவைக்கல் மெத்தகிடக்குது வாரிப் போகச்சொல்லு
கோட்டைக்குவெளியே மணல்கிடக்குது வாரிப் போகச்சொல்லு
ஒட்டையாயிரம் யானையாயிரம் ஓட்டி வரச்சொல்லு
பொதிகள்போட்டு நவாப்புசாயபை யெடுத்துப் போகச்சொன்னன்
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் தோன்ற மல்லனும்
கால்நடுங்கி கைநடுங்கி களைத்து விழுந்தானும்
செத்தபிணம் போலேயிருந்தான் தோன்ற மல்லனுமே
மூர்ச்சைதெளிந்து யெழுந்தானையா தோன்ற மல்லனுமே
பார்க்கப்பார்க்கக் கோபமீளுது ராஜாவுக் காணும்
கோபம்வருவதைக் கண்ணலேகண்டான் தோன்ற மல்லனுமே
ரங்கநாதரை வேண்டிக்கொண்டான் தோன்ற மல்லனும்
தெரியாமற்படிக்கு செஞ்சிக்குவந்தேன் ரங்க நாதரே
என்னுயிர்கொண்டு ஆற்காடுபோனல் ரங்க நாதரே
ஆயிரம்பேருக்கு அன்னங்கொடுக்கிறேன் ரங்க நாதரே
கோதானம் பூதானங்கொடுக்கிறேன் ரங்க நாதரே

வஸ்திரதானம் வகைவகையாக வந்தவருக்குக் கொடுப்பேன்
மங்களமாக கலியாணங்கள் மகிழ்வாய் செய்துவைப்பேன்
ஜோகிஜங்கம ரெவர்வந்தாலுஞ் சொர்ணதானங் கொடுப்பேன்
வேதவேதியர் கேட்கும்வகைகளை விருப்பமுடன் தருவேன்
கலகலவென்று சிரித்தானையா ராஜா தேசிங்கு
நானொருசேதி சொல்லுகிறேன் தோன்ற மல்லனே
நீவந்தாப்போல் நவாப்புவந்தால் குத்திப் போடுவேநான்
உங்கள்-நவாப்புக்கிப்போ பயப்படவில்லை தோன்ற மல்லோஜி
உன்-நெற்றிநாமத்தைக் கண்டுபயந்தேனடா தோன்ற மல்லண்ணு
ரங்கர் வார்த்தையைக் கண்டுபயந்தேன் தோன்ற மல்லண்ணு
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் தோன்ற மல்லனும்
ராமுராமுரே ராமுராமுரே ராஜா தேசிங்கு
என்தன்மேலே கோபம்வேண்டாம் ராஜா தேசிங்கு
நானிப்போதே ஓடிப்போகிறேன் ராஜா தேசிங்கு
சலாஞ்செய்து திரும்பினானையா தோன்ற மல்லனுமே
கோட்டைக்குவெளியே வந்தானையா தோன்ற மல்லனுமே
நானொருபேச்சு சொல்லுகிறேன்கேளும் ஜமேதாரு மாரே
அந்தப்பேச்சுக்கு என்னசொல்கிறான் தோன்ற மல்லனும்
நான்-ஆனைமீதில் ஏறமாட்டேன் ஜமேதாரு மாரே
குதிரையின்மேல் ஏறமாட்டேன் ஜமேதாரு மாரே
தண்டுக்குள்ளே படுத்துக்கொள்கிறேன் ஜமேதாரு மாரே
நாம்-சீக்கிரமாக மூணுநாள்பயணம் செஞ்சிக்கு வந்தோமே
இன்றையாத்திரி ஆற்காட்டுக்கு கொண்டுபோக வேணும்
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டார் ஜமேதாரு மாரும்
கட்டியிருந்த குதிரையுஞ்சேனையும் சடுதியில் நடந்திடவே
காற்றுபோலே பறக்குறாரையா ஜமேதாரு மாரும்
ஆற்காடுவீதியில் நகாருசத்தம் அன்பாய் அடித்தானும்
அங்கேபோட்ட நகாருசத்தம் நவாப்பு கேட்டானும்
அந்தவேளையி லென்னசொல்கிறான் நவாப்பு சைதுல்லா
அண்ணுவாடா தம்பிவாடா பங்காரு நாய்க்கா£
சல்-செஞ்சிகோட்டை பணமும்வருகுது பங்காரு நாய்க்கா£

சதுருசமக்காளம் போடச்சொன்னூர் நவாப்பு சைதுல்லா
சருப்புசெட்டியை அழைக்கச்சொன்னுன் நவாப்பு சைதுல்லா
தூங்காவிளக்கை வைக்கச்சொன்னுன் நவாப்பு சைதுல்லா
பணமும்வாங்கத் தயார்பண்ணினுன் நவாப்பு சைதுல்லா
அந்தவேளையில் என்னபண்ணுறுன் தோன்ற மல்லனும்

## நவாப்பிடத்தில் தோன்றமல்லன் வந்து சொல்லல்.

நவாப்புமாலில் வந்தானையா தோன்ற மல்லனும்
சலாஞ்செய்து எதிரிலேநின்றுன் தோன்ற மல்லனும்
பதில்சலாமுங் கொடுத்தானையா நவாப்பு சைதுல்லா
கொள்ளுகுத்தின உலக்கைபோல முன்னே நின்றுனும்
தோன்றமல்லனைக் கண்ணுலேகண்டான் நவாப்பு சைதுல்லா
அடா-என்னகாரியம் பண்ணினுயடா தோன்ற மல்லண்ணு
பணம்எங்கே காசுஎங்கே தோன்ற மல்லண்ணு
ஐயா-பணமுங்காணேன் காசுங்காணேன் நவாப்பு சைதுல்லா
நூற்றெழுபத்திரண்டு பாளையப்பட்டுக்கு நானே போயிருக்க
இத்தனைநாளு மவனைப்போலே நானும் பார்த்ததில்லை
இனியில்லாத பாடுபடுத்தினுன் ராஜா தேசிங்கு
ராஜா-படுத்தினபாடு பாருமையா நவாப்பு சைதுல்லா
செத்துப்போனவன் திரும்பிவந்தேன் நவாப்பு சைதுல்லா
வாயினுலே சொல்லமாட்டேன் நவாப்பு சைதுல்லா
செஞ்சிகோட்டையான் ஓலையெழுதினுன் நவாப்பு சைதுல்லா
ஓலைமுகத்தை கண்ணுலேபாரும் நவாப்பு சைதுல்லா
ஓலையெடுத்து எதிரில்வைத்தான் தோன்ற மல்லனும்
அந்தவேளையில் என்னசொல்கிறுன் நவாப்புசைதுல்லா
ஆயிரங்கணக்குப் பிள்ளைக்குப்பெரிய கணக்கப்பிள்ளை வாரும்
வாசித்துப்பார்த்து தலையைக்குனிந்தான் ரங்கநாதப் பிள்ளை
என்னகாரியம் பண்ணினுய்நீ ரங்கநாதப் பிள்ளை
இரண்டு நாழியில் இடித்துபோடுகிறேன் செஞ்சிகோட்டையைநான்
எதிர்த்து வந்த தேசிங்குராஜனை குத்திப்போடுவேநான்
ஆண்சிறைபெண்சிறை தள்ளிப்பிடிக்கிறேன் செஞ்சி கோட்டைக்
உண்டான சேதிவெளியிலேசொல்லும் ரங்கநாதப்பிள்ளை [குள்ளே

அந்தவேளையில் என்னசொல்கிறுன் ரங்காதப் பிள்ளை
நானொருசேதி சொல்கிறேன்கேளும் நவாப்பு சைதுல்லா
ஆண்பிள்ளையானுல் நவாப்புசாயபை இன்றைக்கு வரச்சொல்லும்
சல்-பெண்பிள்ளையானுல் நவாப்புசாயபை அங்கேயிருக்கச்சொல்லும்
மீசைமுளைத்த ஆண்பிள்ளையானுல் சண்டைக்கு வரச்சொல்லும்
கத்திமுனையிற் பணமுந்தாரேன் நவாப்புக் காணும்
ஈட்டிமுனையிற் பணமுந்தாரேன் நவாப்புக் காணும்
போனவருஷத்துக் கிந்தவருஷம் வாருமெத்த விளைவாம்
வாருவைக்கல் மெத்தகிடக்குது வாரிப்போகச் சொல்லும்
கோட்டையின்மேல் கல்லுகிடக்குது கட்டிபோகச் சொல்லும்
கோட்டைவெளியில் மணல்கிடக்குது வாரிப்போகச் சொல்லும்
இத்தனைசமர்த்து மிருந்ததேயானுல் இங்கே வரச்சொல்லும்
திராணியில்லாத பெண்பிள்ளையானுல் அங்கே யிருக்கச்சொல்லும்
இந்தப்படியா யெழுதியிருக்குது நவாப்பு சைதுல்லா
அந்தச்சேதி காதிலேகேட்டான் நவாப்பு சைதுல்லா
கேட்டவுடனே வயிறெரியுது நவாப்புக் காணும்
நீலவிழிக்கண்கள் நெரியுதையா நவாப்புக் காணும்
மீசை-படபடவென்று துடிக்குதையா நவாப்புக் காணும்
சல்-பட்டாவுருவி கையிலேபிடித்தான் நவாப்பு சைதுல்லா
அண்ணவாடா தம்பிவாடா பங்காரு நாய்க்கனே
உனக்கு-ஆனைசெத்தால் ஆனைதாரேன் பங்காரு நாய்க்கனே
குதிரைசெத்தாலும் குதிரைதாரேன் பங்காரு நாய்க்கனே
தளங்கள்செத்தாலும் தளங்கள்தாரேன் பங்காரு நாய்க்கனே
ஜண்டாயிழுத்து வெளியிலேபோடு பங்காரு நாய்க்கனே
அந்தவேளையில் என்னசொல்கிறுன் பங்காரு நாய்க்கனும்
நூற்றெழுபத்திரண்டு பாளையக்காரரை கொலுவுக்கு வரச்சொல்லும்
ஓலையெழுத்தாணி கையிலேபிடித்தான் பங்காரு நாய்க்கனும்
ஓலையெழுதி தயார்பண்ணினுன் பங்காரு நாய்க்கனும்
எழுபத் திரண்டு அர்க்காருமாரைத் தயார்பண்ணினுனும்
அஞ்சல்மேலே அஞ்சல்வைத்தான் பங்காரு நாய்க்கனும்
ஓலையெடுத்து கையிலேகொடுத்தான் அர்க்காரு மாருக்கு

## அர்க்கார்கள் பாளையப்பட்டுக்கு ஓலை கொண்டுபோகுதல்.

காற்றுப்போலே பறக்குறாரையா அர்க்காரு மார்களும்
மேகம்போலே பறக்குறாரையா அர்க்காரு மார்களும்
இரண்டுநாழியிற் போய்ச்சேர்ந்தாரையா அர்க்காரு மார்களும்
ஓலையைக்கொண்டுபோய் கையில்கொடுத்தார் அர்க்காரு மார்களும்
ஓலையைப்பிரித்துப் பார்த்தாரையா பாளையக் காரரும்
அவரவர்களுக் கேற்ற துருப்புக்குதிரை தயார்பண்ணினாராம்
சேத்துப்பட்டு தாவுத்துக்காரன் கொலுவுக்கு வாறானும்

## நவாப்பிடத்தில் பாளையப்பட்டார் வருதல்.

சேத்துப்பட்டு ரங்காரவு கொலுவுக்கு வந்தாராம்
திருவண்ணாமலை சுபங்கி துரையும் கொலுவுக்கு வாறானும்
திமிரிக்கோட்டை ஷேக்முகம்மது கொலுவுக்கு வாறானும்
வாலிக்கோட்டை அப்துல்காதரும் கொலுவுக்கு வாறானும்
மதுரைசீமை மலையாளத்தானும் கொலுவுக்கு வாறானும்
ஆரணிகோட்டை வெங்கடராயனும் கொலுவுக்கு வாறானும்
அரியலூரு பெரியதுரையும் கொலுவுக்கு வாறானும்
ஆச்சிநாய்க்கன் பொம்மிநாய்க்கன் கொலுவுக்கு வாறானும்
எட்டியாபுரத்து பாளையக்காரன் கொலுவுக்கு வாறானும்
நூற்றெழுபத்திரண்டு பாளையக்காரரும் கொலுவுக்கு வந்தாராம்
ஆற்காட்டுக்கு ஐங்காதவழியில் வந்து நிறைந்தார்கள்
பாளையக்காரர் வந்தசேதியை நவாப்பு கேட்டானும்
சீமைக்குநாட்டார் வந்தசேதியைக் காதிலே கேட்டானும்
சிங்கக்குட்டிபோல் பாளையக்காரரைக் கண்ணிலே கண்டானும்
அந்தவேளையி லென்னசெய்கிறான் நவாப்பு சைதுல்லா

## நவாப்பு பங்காருநாய்க்கனுக்குச் சேனைகளையும் கிஸ்தியையும் தயார் செய்யச்சொல்லல்.

பெரியகணக்கு பங்காருநாய்க்கனைக் கிட்ட வரச்சொன்னான்
அண்ணாவாடா தம்பிவாடா பங்காரு நாய்க்கரே
மூன்றுமாதத்திற் கிஸ்திகட்டடா பங்காரு நாய்க்கரே

நூற்றெழுபத்திரண்டு பாளையக்காரருக்கு விருது கட்டடாநீ
அறுபதினுயிரம் ரேக்லாபீரங்கி தயார் பண்ணடாநீ
எண்பதுகோடி பாரூதுப்பாக்கி தயார் பண்ணடாநீ
அதற்குத்தகுந்த குண்டுமருந்து தயார் பண்ணடாநீ
ஐந்நூறுபேர் ஜமேதாருக்கு சேதி சொல்லடாநீ
நூற்றெழுபத்திரண்டு பாளையப்பட்டுக்குங் கிஸ்தி கட்டடாநீ
வெள்ளைக்கூடாரம் பச்சைக்கூடாரம் தயார் பண்ணடாநீ
கணக்கில்லாத சேனைதளத்தை தயார் பண்ணடாநீ
எண்பதினுயிரம் பீரங்கிகுண்டு தயார் பண்ணடாநீ
அந்தவேளையில் என்னபண்ணுகிறுன் பங்காரு நாய்க்கனும்
ஐம்பதுகோடி பீரங்கிகுண்டு தயார் பண்ணிஞனும்
அறுபதினுயிரம் துருப்புகுதிரை தயார் பண்ணிஞனும்
எண்பதினுயிரம் பீரங்கிகுண்டு தயார் பண்ணிஞனும்
நூறுயிரம் ரேக்லாகுண்டு தயார் பண்ணிஞனும்
இருபதினுயிரம் ஆனைகளையும் தயார் பண்ணினும்
ஐம்பதினுயிரம் ஒட்டகங்களைத் தயார் பண்ணினும்
எண்பதினுயிரம் பாலாயீட்டிகள் தயார் பண்ணிஞனும்
லக்ஷத்திருநூறு சிப்பாய்மாரைத் தயார் பண்ணிஞனும்
அவரவர்களுக்கேற்ற வஸ்துகளெல்லாம் தயார் பண்ணிஞனும்
அறுபத்துநாலு ஜண்டாமாமும் தயார் பண்ணிஞனும்
பதின்காதவழி பாவியிருக்குது நவாப்பு சைதுல்லா
அந்தவேளையி லென்னபண்ணிஞன் பங்காரு நாய்க்கனும்
சலாமையா சலாமையா நவாப்பு சைதுல்லா
பாளையமெல்லாம் தயாராச்சுது நவாப்பு சைதுல்லா
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் நவாப்பு சைதுல்லா
மாலுக்குள்ளே புகுந்தானையா நவாப்பு சைதுல்லா
காலுக்குத்தமான் போட்டானையா நவாப்பு சைதுல்லா
இடுப்புக்குக்கச்சை யிறுக்கிக்கட்டிஞன் நவாப்பு சைதுல்லா
அங்கிதமான் போட்டானையா நவாப்பு சைதுல்லா
தலைப்பாயெடுத்து தலையில்தரித்தான் நவாப்பு சைதுல்லா
கலிக்கத்துறு கட்டிஞனையா நவாப்பு சைதுல்லா

பட்டாவுருவி கையிலேபிடித்தான் நவாப்பு சைதுல்லா
தனக்குவளர்த்த பட்டத்துயானையை ஜல்தி வரச்சொன்னுன்
ஆனைகொம்புக்கு கத்திகட்டினுன் நவாப்பு சைதுல்லா
ஆனையைச்சுற்றி முகமல்கட்டினுன் நவாப்பு சைதுல்லா
அம்பாரிக்குள்ளே தொட்டில்கட்டினுன் நவாப்பு சைதுல்லா
ஆனையைத்தொட்டு சலாம்வாங்கினுன் நவாப்பு சைதுல்லா
வலதுகாலை தூக்கிக்கொடுத்தது பட்டத்து யானையும்
இருப்புலக்கை கையிலிருக்குது யானைக் காணுலும்
உலக்கையைப்போட்டு சலாம்வாங்குது பட்டத்து யானையும்
அல்லாகூ அல்லாகூவென்று ஆனை யேறினுனும்

## நவாப்பும் மற்ற பாளையப்பட்டாரும் சேனைகளும் செஞ்சிக்குச் சண்டைக்கு வருதல்.

செஞ்சிகோட்டைக்குப் பயணமென்று நகா ரடித்தானும்
கணகணகணகண கணகணவென்று நகாரு முழங்குதுபார்
பளபளபளபள பளபளவென்று பட்டாக்கள் மின்னுதுபார்
தடதடதடதட தடதடவென்று தமுறு முழங்குதுபார்
சரசரசரசர சரசரவென்று சல்லிய முழங்குதுபார்
துந்துமிபேரிகை சில்லரிசல்லரி தோந்தோந் தோமெனவே
அவுதாவுருயாலே வீசுகிறுர்கள் நவாப்புக் காணுலும்
வெள்ளைவெண்சாமரை போடுகிறுர்கள் நவாப்புக் காணுலும்
சரிகைவுருமாலே வீசுகிறுர்கள் நவாப்புக் காணுலும்
நெருங்கிக்கொண்டு வாறுனையா நவாப்பு சைதுல்லா
பதின்காதவழிக்குப் பரவியிருக்குது நவாப்பு பாளையமும்
எள்ளுபோட்டால் எள்ளுவிழாது நவாப்பு பாளையத்தில்
கிள்ளினமண்ணு கீழேவிழாது நவாப்பு பாளையத்தில்
அந்தவேளையில் எங்கேவாறுர் நவாப்பு சைதுல்லா
திமிரிக்கோட்டையைத் தேடியேவாறுர் நவாப்பு சைதுல்லா
ஒரேதினத்தில்வந் திறங்கினுனையா நவாப்பு சைதுல்லா
பங்காருநாய்க்கனை பக்கமழைத்தான் நவாப்பு சைதுல்லா
சம்பளம்போடு ரஸ்துகள்போடு பங்காரு நாய்க்கரே

இறங்கிச்சம்பளம் கொடுத்தானையா பங்காரு நாய்க்கனும்
தண்டுக்குராஸ்தா போட்டானையா பங்காரு நாய்க்கனும்
அவ்விடம்விட்டுப் புறப்பட்டானையா நவாப்பு சைதுல்லா
ஆற்காட்டுக்கோட்டையைத் தாண்டிவருகிறான் நவாப்பு சைதுல்லா
அவ்விடமிறங்கி கூடாரம்போட்டு நவாப்பு சைதுல்லா
அன்றிராத்திரி அங்கேவந்தான் நவாப்பு சைதுல்லா
போடுபோடென்று வாறானையா நவாப்பு சைதுல்லா
எரிஞ்சுகொண்டு வாறானையா நவாப்பு சைதுல்லா
செஞ்சிக்கோட்டைக்கு ஐந்துநாழிவழி தேவனூரு பேட்டை
தேவனூரு பேட்டைஓரத்தில் சங்காபரணி யாறு
சங்காபரணிக் கரையில்வந்து நவாப்பு பாளையமும்
அண்ணுவாடா தம்பிவாடா பங்காரு நாய்க்காநீ
தண்டுக்குசேனையைப் பிரித்துப்போடடா பங்காரு நாய்க்காநீ
தண்டுகடைசியில் கூடாரம்போடடா பங்காரு நாய்க்காநீ
தண்டுக்குமுன்னே மோர்ஜாபோடடா பங்காரு நாய்க்காநீ
மெத்தைமேலே பீரங்கிஏத்து பங்காரு நாய்க்காநீ
துருப்புகுதிரை சுற்றிலும்வையும் பங்காரு நாய்க்காநீ
ஒருபளுத்தா சல்தியாய்த்தீரும் பங்காரு நாய்க்காநீ
அந்தப்படியே உத்தாரங்கொடுத்தான் நவாப்பு சைதுல்லா
நானொருசேதி சொல்கிறேன்கேளும் நவாப்பு சைதுல்லா
ஆராருக்குப் பயணஞ்சொல்ல நவாப்பு சைதுல்லா
உத்தாரங்கொடுத்த நிமிஷநேரத்தில் பங்காரு நாய்க்கனும்
ஜல்திஜல்தியாய்ப் பளித்தாதீர்த்தான் தேவனூர் பேட்டையிலே
அந்தபளுத்தா காதிலேகேட்டது நவாப்பு பாளையமும்
மரங்கள்மட்டைகள் தரித்துப்போடுறார் நவாப்பு பாளையமும்
தேவனூர்பேட்டையை யிடித்துப்போடுறார் நவாப்பு பாளையமும்
இனியில்லாத கொள்ளையிடுகிறார் நவாப்பு பாளையமும்
அந்தவேளையி லென்னசெய்கிறார் ராஜா தேசிங்கு
புதுசெஞ்சியிலே பூசைபண்ணுறார் ராஜா தேசிங்கு
பழஞ்செஞ்சியிலே கார்பார்பண்ணுறார் சிற்றப்ப ராஜாவும்
அலங்கத்துமேலே யேறிப்பார்த்தான் சிற்றப்ப ராஜாவும்

கிடுகிடுவென்று பயந்துநடுங்கி கீழே விழுந்தாராம்
கீழேவிழுந்த சிற்றப்பராஜா திட்டென் றெழுந்தாராம்.

## சிற்றப்பராஜன் தேசிங்குராஜனிடத்தில் வந்து சொல்லுதல்.

மைந்தனருகி லோடிவந்தான் சிற்றப்ப ராஜாவும்
காஞ்சி நாதரைக் காவேட்டிரங்கரைப் பூசை பண்ணுறனும்
ஸ்ரீ ஹரிகோ விந்தாவென்று பூசை பண்ணுறனும்
அரிநமோ நாராயணாவென்று பூசை பண்ணுறனும்
கண்ணைமூடி பூசைசெய்கிறன் ராஜா தேசிங்கு
பூசைமுகத்தில் வந்துநின்றன் சிற்றப்ப ராஜாவும்
என்னபூசை பண்ணிறயடா மகனே தேசிங்கு
உன் பூசைமுகத்தில் இடிவிழுந்தது மகனே தேசிங்கு
கோட்டையைச்சுற்றி வளைந்திருக்குது நவாப்பு பாளையமும்
பாதிபூசையைத் தள்ளிப்போடடா மகனே தேசிங்கு
தோப்புருபணத்தை கட்டியனுப்பும் மகனே தேசிங்கு
இந்தச்சேதி காதிலேகேட்டான் ராஜா தேசிங்கு
மூடினகண்ணைத் திறந்துபார்த்தான் ராஜா தேசிங்கு

## தேசிங்குராஜன் சிற்றப்பராஜாவுக்குச் சொல்லுதல்.

என்னபேச்சு பேசினீரையா சிற்றப்ப ராஜாவே
அறுபதுவயது சென்றதுவுமக்கு அறிவுங் கொஞ்சமில்லை
பூசைமுகத்தைக் கெடுக்கவேண்டாம் சிற்றப்ப ராஜாவே
அரைக்கால்நாழி பொறுத்துகுதிரையைத் தயார் பண்ணச்சொல்லும்
வெள்ளரிக்காய் வீசினற்போலே வீசிப் போடுகிறேன்
பத்தல்பத்தலா கிழித்துபோடுறேன் நவாப்பு பாளையத்தை
சக்கைசக்கையாய் சிதைத்துப்போடுறேன் சேனைகளை யெல்லாம்
அரைக்கால்நாழி பொறுத்துக்கொள்ளும் சிற்றப்ப ராஜாவே
தலைதலையா யுருட்டிப்போடுறேன் தளங்களை யெல்லாம்
கதறிப்பதறி சிதறிட்டோட கரிகளை வாட்டுகிறேன்
இந்தப்படியாய் செய்யாமற்போனல் என்பேர் தேசிங்கல்ல
டாறுடாறுய்க் கிழித்துப்போடுறேன் நவாப்பை யானலும்

ஆனால்நல்ல தாகட்டுமென்றான் சிற்றப்ப ராஜாவும்
அந்தவேளையி லென்னசொல்கிறான் ராஜா தேசிங்கு
கண்ணைமூடி பூசைசெய்கிறான் ராஜா தேசிங்கு
அந்தவேளையி லென்னபண்ணுறான் சுபங்கி துரைதானும்
திருவண்ணாமலை சுபங்கிதுரையும் நவாப்பு முன்னேவந்தான்

## சுபங்கிதுரை நவாப்பைக் கேட்டல்.

சலாமையா சலாமையா நவாப்பு சைதுல்லா
நானொருசேதி சொல்கிறேன்கேளும் நவாப்பு சைதுல்லா
இரண்டுநாழியிற் பிடித்துக்கொடுக்கிறேன் செஞ்சிக் கோட்டையை
மூவாயிரம் வீடுகளிருக்குது தேவனூர் பேட்டையிலே
அரைக்கால்நாழி கொள்ளைகொடுமையா நவாப்பு சைதுல்லா
நிமிஷநேரத்தில் பிடித்துதருகிறேன் நவாப்பு சைதுல்லா
மூவாயிரம் குதிரைகளுடனே கொள்ளைக்குப் புறப்பட்டான்

## சுபங்கிதுரை தேவனூரைக் கொள்ளையிடுதல்.

தேவனூருக்குள்ளே புகுந்தானையா சுபங்கி துரைதானும்
இனியில்லாத கொள்ளையிடுகிறான் சுபங்கி துரைதானும்
வீடுவாசலை யிடித்துப்போடுறான் சுபங்கி துரைதானும்
மாடமண்டப மிடித்துப்போடுறான் சுபங்கி துரைதானும்
ஆண்சிறைபெண்சிறை தள்ளிப்போடுறான் சுபங்கி துரைதானும்
மாடுகன்றுகள் மடக்கிப்பிடிக்கிறான் சுபங்கி துரைதானும்
பெட்டிபேழைகள் எடுத்துடைக்கிறான் சுபங்கி துரைதானும்
பொன்னுவெள்ளிகள் மூட்டைகட்டுறான் சிப்பாய் துரைதானும்
அப்படிக்குச்சிறை யழித்துபோடுறான் சுபங்கி துரைதானும்
கொள்ளையடித்து வெளியில்வந்தான் சுபங்கி துரைதானும்
நவாப்புபாளையம் வந்துசேர்ந்தான் சுபங்கி துரைதானும்
இந்தப்படிக்கு இருக்குறானையா நவாப்பு சைதுல்லா
தேவனூரிலே யிருந்தஜனங்கள் திகைத் தோடினார்கள்
காடு மலைகள் செடிகளெல்லாங் கடந்தோடினார்கள்
கோவென்றசத்த மாச்சுதையா செஞ்சிகோட்டை வெளியில்
அந்தவேளையி லென்னபண்ணுறார் குடியான மார்களும்

தலையிற்கையை வைத்தழுகிறார் குடியான மார்களும்
கோட்டைக்குள்ளே வந்தாரையா குடியான மார்களும்
அந்தவேளையி லென்னசெய்கிறான் ராஜா தேசிங்கு
ஸ்ரீநந்தா கோவிந்தாவென்று தோத்திரஞ் செய்கிறானும்
மங்கைலட்சுமி மணாளாவென்று மனதி லெண்ணுறானும்
பூசைமுகத்தில் வந்துநின்றார் குடியான மார்களும்

## குடிகள் தேசிங்குராஜனிடத்தில் முறையிடல்.

என்னபூசை பண்ணுறீரையா ராஜா தேசிங்கு
தேவனூரிலே கொள்ளையடிக்கிறான் சுபங்கி துரைதானும்
வீடுவாசலை யிடித்துப்போட்டான் சுபங்கி துரைதானும்
மாடுகன்றுகள் மடக்கிப்போடுறான் சுபங்கி துரைதானும்
அகப்பட்டசிறையைப் பிடித்துப்போட்டான் சுபங்கி துரைதானும்
பெட்டிபோச்சுது பேழைபோச்சுது ராஜா தேசிங்கு
பெண்சாதிபோச்சுது பிள்ளைபோச்சுது ராஜா தேசிங்கு
ரொக்கம்போச்சுது ரோசனம்போச்சுது ராஜா தேசிங்கு
நாங்களென்னமாய் பிழைக்கப்போகிறோம் ராஜா தேசிங்கு
கண்கள்நிறையத் தண்ணீர்விட்டார் குடியான மார்களும்
ஐயாநாங்க ளென்னசெய்குவோம் ராஜா தேசிங்கு
இத்தனைநாளும் சீராய்ப்பிழைத்தோம் ராஜா தேசிங்கு
இன்றையகஸ்தி யென்னசொல்லுவோம் ராஜா தேசிங்கு
தாமரைஇலையிற் றண்ணீர்ப்போல தவிக்கிறோ மையா
ஊரையுமெங்களைக் காக்கவேணும் ராஜா தேசிங்கு
கதறியழுது புலம்புறாரையா குடியான மார்களும்
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் ராஜா தேசிங்கு.

## தேசிங்கு குடிகளுக்குத் தேறுதல் சொல்லல்.

கதறவேண்டாம் பதறவேண்டாம் குடியான மார்களே
என்சீமையில் தேவனூருபேட்டை பொருகொள்ளை போச்சுது
நவாப்புசீமை யடங்கலும்கொள்ளை யுங்களுக்கு வாங்கித்தாரேன்
நமதுசீமையில் தமிழ்ச்சிறையொன்று போச்சு தானும்
துலுக்கன்சிறையை பிடித்துத்தாரேன் குடியான மார்களே

ஒருகொள்ளைக்கு ஒன்பதுகொள்ளை நான் வாங்கித்தாரேன்
ஒன்றுக்கும்நீங்க ளஞ்சவேண்டாம் குடியான மார்களே
பூசைமுகத்தைக் கெடுக்கவேண்டாம் குடியான மார்களே
ஆனால்நல்ல தாகட்டுமென்று அப்புறம் போனார்கள்
கண்ணைமூடிப் பூசைபண்ணுறான் ராஜா தேசிங்கு
அந்தவேளையி லென்னபண்ணுறான் அவனிட தாயாதி
தேசிங்குராஜன் தாயாதியையா தன்சிங்கு ராஜாவும்
ஒற்றைக்குதிரைப் போட்டுக்கொண்டு ஓடிவந்தா னெதிரே.

## தன்சிங்குராஜன் தேசிங்குராஜன்முன் வந்து சொல்லல்

என்னபூசை பண்ணினீரையா ராஜா தேசிங்கு
தேவனூரு கொள்ளையாய்ப்போச்சுது ராஜா தேசிங்கு
கோட்டையேறி குதிக்கிறாரையா நவாப்பு பாளையமும்
இந்தப்படிக்கு சொல்லிநின்றான் தன்சிங்கு ராஜாவும்
கண்ணைவிழித்துப் பார்த்தானையா சிப்பாய் தேசிங்கு
பாதிபூசை தள்ளிப்போட்டான் ராஜா தேசிங்கு
கனைத்துக்கதும்பி யெழுந்தானையா சிப்பாய் தேசிங்கு
ரங்கர்கோயிலில் துலுக்கன்புகுந்தால் எனக்கென்ன பூசை
துலுக்கனைவெட்டி பூசைசெய்கிறேன் தன்சிங்கு ராஜனே
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் தன்சிங்கு ராஜனும்
ஆனால்நல்ல தாகட்டுமென்றான் தன்சிங்கு மகாராஜன்
அந்தவேளைக்கு என்னபண்ணுறான் ராஜா தேசிங்கு
சிங்காரமர்லிலே வந்தானையா ராஜா தேசிங்கு
திருமண்பெட்டியைக் கையிலெடுத்தான் ராஜா தேசிங்கு
முத்துப்போலவே திருமணியங்கே நெத்தியி லிட்டானும்
காலுக்குடுத்தினி போட்டானையா ராஜா தேசிங்கு
இடுப்பில்கச்சையை இறுக்கிக்கட்டினான் ராஜா தேசிங்கு
சரிகையுருமாலை தலையிற்கட்டினான் ராஜா தேசிங்கு
மாருக்குகவசம் போட்டானையா சிப்பாய் தேசிங்கு
அங்கியெடுத்து மேலுக்குபோட்டான் ராஜா தேசிங்கு
ஐந்துதுலாம் பரிசைகத்தி கையி லெடுத்தானும்

எழுதுலாம் பரிசைபாலா கையில் பிடித்தானும்
சிங்கம்போலே உட்கார்ந்தானையா ராஜா தேசிங்கு
ஜெயராமு கெங்காராமு கொலுவுக்கு வந்தாராம்
சிற்றப்பதுரை தரணிசிங்கு கொலுவுக்கு வந்தாராம்
நத்தர்சிங்கு கோபால்சிங்கு கொலுவுக்கு வந்தாராம்
ராமசிங்கு லட்சுமணசிங்கு கொலுவுக்கு வந்தாராம்
ராமுதாரி லட்சுமணதாரி கொலுவுக்கு வந்தாராம்
மான்சிங்கு கிருபுசிங்கு கொலுவுக்கு வந்தாராம்
ஏரேகும்பலாய்க் கூடினாரையா முன்னூறு ஜனமுந்தான்
ராமுராமுரே சீதாராமுரே ராஜா தேசிங்கு
பதில்சலாமுங் கொடுத்தானையா சிப்பாய் தேசிங்கு
சிப்பாய்மார்களைக் கண்ணாலேகண்டான் ராஜா தேசிங்கு
கலகலவென்று சிரித்தானையா ராஜா தேசிங்கு
ஐயாகேளும் ஐயாகேளும் ராஜா தேசிங்கு
எண்பதினாயிரம் குதிரையிருக்குது நவாப்புக் கானும்
லக்ஷம்பேர் சிப்பாயிருக்கிறார் நவாப்புக் கானும்
மூன்னூறுகுதிரை நமக்கிருக்குது சிற்றப்ப ராஜாவே
இந்தக்குதிரை யெனக்கிருக்குது சிற்றப்ப ராஜாவே.

## தேசிங்கு மோவுத்துக்காரனை அழைக்கச் சொல்லல்.

முன்னூறுகுதிரைக்குத் துடியானவன் ஒற்றைக் குதிரைக்காரன்
வழுதாவூரில் இருக்கிறானையா மாப்பிள்ளை ராயனும்
இரண்டுநிமிஷத்தில் அழைப்பிக்கவேணும் சிற்றப்ப ராஜாவே
ஜல்திஜல்தி யென்றுசொன்னான் ராஜா தேசிங்கு
ஆனால்நல்ல தாகட்டுமென்றான் சிற்றப்ப ராஜாவும்
ஓலையெழுதி கையில்கொடுத்தான் சிற்றப்ப ராஜாவும்
மூன்றுபேர் அர்க்காருமாரை ஜல்தியில் அழைத்தானும்
ஓலைஎடுத்து கையிலேகொடுத்தான் அர்க்கார் மார்களுக்கு
ஜல்திஜல்தி யென்றுசொன்னான் சிற்றப்ப ராஜாவும்
சலாம்வாங்கி திரும்பினாரையா அர்க்காரு மார்களும்
செஞ்சிக்கோட்டைக்கும் வழுதாவூருக்கும் முக்காத வழிதூரம்

மூன்றுநாழியில் போய்ச்சேர்ந்தார்கள் அர்க்கார் மார்களும்
அந்தவேளையி லென்னபண்ணுறுன் மோவுத்துக் காரனும்
கலியாணமும் கூடியிருக்குது மோவுத்துக் காரனுக்கு
கையிற்கங்கணம் கட்டியிருக்கிறுன் மோவுத்துக் காரனும்
கலியாணபந்தல் ஜோடித்திருக்குது மோவுத்துக் காரனுக்கு
கர்ணபூரி பாங்குமுழங்குது வழுதா வூருக்குள்ளே
மஞ்சள்கங்கணம் கட்டியிருக்குது மோவுத்துக் காரனுக்கு
சரிகைஉடுப்பு தரித்திருக்கிறுன் மோவுத்துக் காரனும்
அல்லாவே அல்லாவேயென்று தாலி கட்டப்போறுன்
ராமாராமா வென்றுசொல்லி தாலி கட்டப்போறுன்
அந்தவேளையி லென்னசெய்கிறுர் அர்க்கார் மார்களும்
ராமுராமுரே ராமுராமுரே மோவுத்துக் காரனே
உங்கள்ராஜா சினேகிதகாரன் ஓலே யனுப்பிவைத்தான்
இந்தவோலே வாசித்துப்பார்த்து என்னை யனுப்புமையா
அந்தப்பேச்சை காதிலேகேட்டான் மோவுத்துக் காரனும்
இடதுகையில் ஓலேவாங்கினுன் மோவுத்துக் காரனும்
ஓலேயைப்பிரித்துப் பார்த்தானையா மோவுத்துக் காரனும்
கலகலவென்று சிரித்தானையா மோவுத்துக் காரனும்
மண்டிபோட்டு எழுந்துட்கார்ந்தான் மோவுத்துக் காரனும்
தாலியைக்கொண்டு தட்டிலேவைத்தான் மோவுத்துக் காரனும்
பட்டாவுருவி கையிலேபிடித்தான் மோவுத்துக் காரனும்.

## மோவுத்துக்காரன் கலியாணப்பந்தலி லுள்ளவர்களை சேலவுகேட்டல்.

சலாமையா சலாமையா சபையி லுள்ளபேரே
சந்தோஷமாக செலவுதாரும் சபையி லுள்ளபேரே
அண்ணமாரே தம்பிமாரே டலாய்த்து துரைமாரே
பச்சைப்பந்தலில் சுகமாயிருங்கள் பட்டாணி துரைமாரே
கத்திமுனையிலே சோறுதின்கிற கர்நாட்டு துரைமாரே
நானொருபேச்சு சொல்கிறேன்கேளும் சபையி லுள்ளபேரே
நானும்போறேன் நவாப்புதண்டுக்கு நல்லசண்டை செய்ய

எதிராளியான நவாப்புதண்டு எதிரிலே விழுந்துதாம்
பகையாளியான நவாப்புதண்டு பக்கத்தில் விழுந்துதாம்
எதிராளியான நவாப்புதண்டுக்கு இடுப்பு கட்டிபோறேன்
சத்துருவான நவாப்புமேலே சண்டைக்கு போகிறேன்நான்
ஆற்காட்டிலுள்ள வீதியெல்லாம் அத்துவானம் பண்ணி
நவாப்பைவெட்டி தாலிகட்டுறேன் பட்டாணி துரைமாரே
ஊனிப்போது போய்வருகிறேன் சபையிலுள்ளபேரே
என்று-சலாம்வாங்கி திரும்பினுனேயா மோவுத்துக் காரனும்
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டாள் அவனைப் பெற்றதாயும்
சையதுசாயபும் தாயாருமாக ஜல்தி ஓடிவந்தார்
எதிரினில்வந்த மகனைநிறுத்தி ஏந்தி முத்தமிட்டாள்
மகனிடமுகத்தைக் கண்ணுலேகண்டு மாதா யென்னசொல்வாள்
வயிற்றில்பத்து மாதஞ்சுமந்து மகனைப் பெற்றேனே
ஈயெறும்பு அண்டவொட்டாமல் இருந்து காத்தேனே
தரையில்விட்டால் மண்படுமென்று தாவி வளர்த்தேனே
மெத்தபுத்தி சாலியென்று மேன்மை யுற்றேனே
சற்றும்யோசனை யில்லாமல்நீ சண்டைக்குப் போறேனென்ருய்
என்னகாரியம் முழுகிப்போச்சுது என்தன் கண்மணியே
சந்தனம்பூசி சண்டைக்குப்போனல் ஜல்தி குண்டுபாயும்
கங்கணங்கட்டி சண்டைக்குப்போனல் கடுக குண்டுபாயும்
மஞ்சளுடுத்தி சண்டைக்குப்போனல் மகனைக் காணமாட்டேன்
தாலிகட்டி விருந்துபொசித்து சந்தோஷமா யிருந்து
வந்தபேருக்கு மரியாதைசெய்து மகிழ்வா யனுப்பிவிட்டு
இன்றைக்கிருந்து நாளைக்குப்போடா என்தன் கண்மணியே
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் மோவுத்துக் காரனும்
அம்மாகேளும் அம்மாகேளும் என்னைப் பெற்றதாயே
என்னிடராஜன் சினேகிதகாரன் எழுதி அனுப்பினுன்
நவாப்புஜனமும் செஞ்சியில்வந்து அலங்க மேறினுராம்
இரண்டுநாழியில் நவாப்பைவெட்டி ரத்தகளரி பண்ணி
ஆற்காடுநகர் வீதியையெல்லாம் அத்துவானம் பண்ணி
செஞ்சிராஜனுக்கு மகுடஞ்சூட்டியே சிறையைக் கொண்டுவாறேன்

நவாப்புமகளைத் தாலிகட்டுறேன் என்னைப் பெற்றதாயே
கட்டாமற்போனால் நவாப்புகையில் கடுக செத்துபோறேன்
இன்றைக்குஞ்சாவு நாளைக்குஞ்சாவு இருக்குது தலைமேலே
பிள்ளைபிறந்தால் சண்டைமுகத்தில் பேரெடுக்க வேணும்
மைந்தன்பிறந்தா லன்னங்கொடுத்து மகிழ்ச்சியாக வேணும்
உன் தன்வயிற்றிற் பிள்ளைபிறந்து ஊதாரி யாவேனோ
ஆறிலுஞ்சாவு நூறிலுஞ்சாவு என்னைப் பெற்றதாயே
பிறந்தவன்றைக்கே சாவிருக்குது பெற்ற மாதாவே
ரணகளத்தில் செத்துப்போனால் நல்ல பதவியுண்டு
கத்திமுனையில் சாவேனேயானால் கனத்த பதவியுண்டு
ஈட்டிமுனையிலே சாவேனேயானால் இனிய பதவியுண்டு
சண்டைமுகத்திலே செத்தேனேயானால் ஜல்தி மோட்சமுண்டு
குண்டுமுகத்தில் செத்தேனேயானால் கோடி லாபமுண்டு
மருந்துபுகையில் சாவேனேயானால் மகா பதவியுண்டு
என்றைக்கும் பேரிருக்கவேணும் இந்த வுலகினிலே
புல்லும்பூமி யுள்ளவரைக்கும் பெரெடுக்க வேணும்
சண்டைஜெயித்து வந்தேனேயானால் தாலி கட்டுகிறேன்
போரைஜெயித்து வந்தேனேயானால் புகழ்ந்து கட்டுகிறேன்
மாண்டுமடிந்து போவேனேயானால் மனது கலங்காதே
சந்திரசூரிய ருள்ளவரைக்கும் தாயே பெற்றவளே
வருஷமொருநாள் திருநாள்செய்ய மனுவு கேட்கிறேன்நான்
உற்றுருறவோ ருள்ளவரைக்கும் மனுவு கேட்கிறேன்நான்
போய்வாரேன் போய்வாரேனிப்போ புண்ணியவதி தாயே
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டு அலறி விழுந்தாளாம்
மைந்தன்பேச்சைக் காதிலேகேட்டு மண்மேல் விழுந்தாளாம்
கங்கணக்கையைப் பார்த்துப்பார்த்துக் கதறி யழுதாளாம்
மஞ்சளுடுப்பைப் பார்த்துப்பார்த்து மயங்கி யழுதாளாம்
முகத்தினொளியைக் கண்டுவருந்தி மூர்ச்சை யானாளாம்
கலியாணப்பெண்ணைக் கண்டுமெலிந்து கலங்கி யழுதாளாம்
இந்தவிதிக்கோ இவ்வகைசெய்தோ மென்று மெலிந்தாளாம்
சந்தோஷகாரியந் தடங்கலாச்சென்று தயங்கி யழுதாளாம்

பந்தலைவிட்டு வெளியேவந்தான் மோவுத்துக் காரனும்
குதிரைலாயத்தில் வந்தானையா மோவுத்துக் காரனும்
முந்நூறுகுதிரைக்குத் துடியானகுதிரை நீலவேணி குதிரை
நீலவேணி யருகில்வந்தான் மோவுத்துக் காரனும்
கழுத்துக்கயிற்றை கால்கயிற்றை கத்தியால் வெட்டினனும்.

## மோவுத்துக்காரன் குதிரையேறுதல்.

நெற்றிமயிரைப் பிடித்தானையா நீலவேணி மேலே
பிடித்தேறின மோவுத்துக்காரனை கண்ணாலே கண்டது
பாதநாட்டிய மாடிவருகுது நீலவேணி குதிரை
கண்ணிற்கண்டான் கோபமாச்சுது மோவுத்துக் காரனுக்கு
கோபத்தினாலே சிமிட்டாகொடுத்தான் நீல வேணிக்கு
பின்னாலேயிழுத்துப் போகுதுபாரு நீலவேணி குதிரை
குதிரையைவிட்டுக் கீழேகுதித்தான் மோவுத்துக் காரனும்
என்னமோசம் பண்ணினாயடா நீல வேணியேநீ
நவாப்புமேலே சண்டைக்குப்போறேன் நீல வேணியேநான்
சண்டைஜெயித்து வந்தேனேயானால் நீல வேணியேநான்
தங்கத்தாலே ஜீனிபோடுறேன் நீல வேணியேநான்
என்று-நீலவேணிக்கு சலாம்வாங்கினான் மோவுத்துக் காரனும்
சலாம்வாங்கித் திரும்பினானையா நீல வேணிமேலே
மேகம்போலே பறக்குதையா நீலவேணி குதிரை
குதிரைகளைப்பு தெரிந்தநாழிக்கு குதிரை தெரியவில்லை
கத்திமின்னல் தெரிந்தநாழிக்கு அவனே தெரியவில்லை
எரிந்துகொண்டு வாறானையா மோவுத்துக் காரனும்
கோட்டைசுற்றி வளைந்திருக்குது நவாப்பு பாளையமும்
நவாப்புபாளையம் கண்ணாலேகண்டான் மோவுத்துக் காரனும்
கலகலவென்று சிரித்தானையா மோவுத்துக் காரனும்
பாளையம்சுற்றிப் போவோமென்றால் இரண்டு நாழிசெல்லும்
பாளையங்குறுக்கே போறானையா நீலவேணி மேலே
ஒற்றைக்குதிரையைக் கண்ணாலேகண்டான் நவாப்பு பாளையத்தில்
முந்நூறுதுருப்பு குதிரையுடனே முன்னே யோடிவந்தான்

முந்நூறுகுதிரையைக் கண்ணாலேகண்டான் மோவுத்துக் காரனும்
இடதுகாலுக்கு சிமிட்டாகொடுத்தான் நீல வேணிக்கு
கறகறவென்று சுழலுதுபாரு நீலவேணி குதிரை
கால்கயிற்றை கழுத்துகயிற்றை அவிழ்க்க நேரமில்லை
இடதுகாலுக்கு சிமிட்டாகொடுத்தான் நீல வேணிக்கு
சிமிட்டாகொடுத்த நிமிஷநேரத்தில் நீலவேணி குதிரை
தாண்டித்தாண்டிதரை மண்டலங்கொண்டது நீலவேணி குதிரை
ஆறுகுளங்கள் தாண்டிவிழுகுது நீலவேணி குதிரை
போடுபோடென்று போகுதையா நீலவேணி குதிரை
லகானுமில்லை ஜீனியுமில்லை நீல வேணிக்கு
குறடாயில்லை சேர்பந்தியில்லை நீல வேணிக்கு
கால்கயிற்றோடே ஓடிவருகுது நீலவேணி குதிரை
கழுத்துக்கயிரோடே யோடிவருகுது நீலவேணி குதிரை
பெரியபெரிய கல்லுகளெல்லாம் புரண்டு போகுதுபார்
சின்னசின்ன கல்லுகளெல்லாம் செந்தூளாகுதுபார்
காடுமலைகள் செடிகளெல்லாம் கலங்கி நடுங்குதுபார்
காற்றுபோலவே பறந்துவருகுது நீலவேணி குதிரை
குதிரைசுழன்ற நிமிஷநாழிக்கு முந்நூறு குதிரையும்
காணைகாணையாய் விழுந்துபோச்சுது நவாப்பு ஜனமுந்தான்
அல்லோலகல்லோல மாகுதையா நவாப்பு பாளையமும்
கட்டியிருந்த குதிரையெல்லாம் அறுத்துக்கொண் டோடுதுபார்
சோறுதின்கிற சிப்பாய்மார்களும் சுருட்டி யோடுறார்கள்
பாருவிருக்கிற சிப்பாய்மார்களும் பதுங்கி யோடினார்கள்
ஓடுகிறபேரை கண்ணிலுங்கண்டான் மோவுத்துக் காரனும்
இடதுகாலுக்கு சிமிட்டா கொடுத்தான் நீலவேணிக்கு
நடுவேவிட்டு பிளந்தானையா நவாப்பு பாளையத்தை
இவனையெதிர்ப்பா ரொருவருமில்லை நவாப்பு பாளையத்தில்
இரண்டுநாழிக்குள் வந்துசேர்ந்தான் செஞ்சிக் கோட்டைக்குள்ளே
சிங்காரமாளியில் வந்தானையா மோவுத்துக் காரனும்
குதிரையைவிட்டுக் கீழேகுதித்தான் மோவுத்துக் காரனும்
ராஜாபேட்டிக்கு வாரானையா மோவுத்துக் காரனும்.

மண்டிபோட்டு சலாம்வாங்கினான் மோவுத்துக் காரனும்
என்னகாரியம் பண்ணினீரையா ராஜா தேசிங்கு
இத்தனைமறதி யுனக்கேனையா ராஜா தேசிங்கு
இத்தனைநாழி நவாப்புஜனமும் இங்கே யிருக்குமா
இரண்டுநாழிகைக்கு முன்னேசொன்னால் நான்வர மாட்டேனா
ஜல்திஜல்தி யுத்தாரந்தாரும் ராஜா தேசிங்கு
கலகலவென்று சிரித்தானையா ராஜா தேசிங்கு
கண்ணாலேகண்டான் கோபமாச்சுது ராஜாவுக் காரனும்
என்னகாரியம் பண்ணினாயடா மோவுத்துக் காரனே
கல்யாணஉடுப்பு கட்டியிருக்கிறாய் மோவுத்துக் காராநீ
கங்கணம்கையிற் கட்டியிருக்கிறாய் மோவுத்துக் காராநீ
கஸ்தூரிசந்தனம் பூசியிருக்கிறாய் மோவுத்துக் காராநீ
தாலிகட்டி வந்தாயோயில்லையோ மோவுத்துக் காராநீ
ஜல்திஜல்தி சொல்லுமென்றான் ராஜா தேசிங்கு
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் மோவுத்துக் காரனும்
என்னபேச்சு பேசினீரையா ராஜா தேசிங்கு
கத்திபிடித்த சிப்பாய்மாருக்குப் பெண்டாட்டி யென்னத்திற்கு
நானொருபெண்ணைத் தாலிகட்டுவேனோ ராஜா தேசிங்கு
நவாப்பைவெட்டி நவாப்புமகளைத் தாலி கட்டவேணும்
ஆற்காட்டிலே கல்யாணம்பண்ணுறேன் ராஜா தேசிங்கு
என்-கலியாணத்திற்கு நீவரவேணும் ராஜா தேசிங்கு
நல்லதந்தப் பேச்சிருக்கட்டும் ராஜா தேசிங்கு
நீர்வாரீரோ நான்போகட்டுமா ராஜா தேசிங்கு
ஜல்திஜல்தி யுத்தாரந்தாரும் ராஜா தேசிங்கு
கனைத்துக்கதும்பி யெழுந்தானையா மோவுத்துக் காரனும்
அந்தப்பேச்சு காதிலேகேட்டான் ராஜா தேசிங்கு
சந்தோஷம்வந்து மூண்டுக்கொண்டது ராஜாவுக் காரனும்
மோவுத்துக்காரனை கிட்டவழைத்துக் கையைப் பிடித்தானும்
கையைபபிடித்து தழுவினானையா ராஜா தேசிங்கு
தழுவிமுகத்தைத் துடைத்தானையா ராஜா தேசிங்கு
ஐயாகேளும் ஐயாகேளும் மோவுத்துக் காரனே

ஒருவனும்சண்டை போடவேண்டாம் மோவுத்துக் காரனே
நானுங்கூட வருகிறேனப்பா மோவுத்துக் காரனே
இன்னொருசேதி சொல்கிறேன்கேளும் மோவுத்துக் காரனே
நான்-கலியாணம்பண்ணி மூன்றுவருஷம் மோவுத்துக் காரனே
பெண்சாதிமுகத்தைப் பார்த்துவருகிறேன் மோவுத்துக் காரனே
ஆனால்நல்ல தாகட்டுமென்றான் மோவுத்துக் காரனும்
அந்தநாழிகைக் கோடிவாரான் ராஜா தேசிங்கு
சிற்றப்பராஜா கிட்டேவந்தான் சிப்பாய் தேசிங்கு
ஐயாகேளும் ஐயாகேளும் சிற்றப்ப ராஜாவே
நவாப்புமேலே சண்டைக்குப்போறேன் சிற்றப்ப ராஜாவே
நான்-பெண்சாதிமுகத்தைப் பார்த்துப்போகிறேன் சிற்றப்ப ராஜாவே
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் சிற்றப்ப ராஜாவும்
என்னகாரியம் பண்ணினையடா குழந்தை தேசிங்கு
நீபிறந்தது வெள்ளிக்கிழமை மகனே தேசிங்கு
இராணிபிறந்தது வெள்ளிக்கிழமை மகனே தேசிங்கு
உன்-குதிரைபிறந்தது வெள்ளிக்கிழமை மகனே தேசிங்கு
உன்-சண்டைபிறந்தது வெள்ளிக்கிழமை மகனே தேசிங்கு
இந்த-நாளும்பிறந்தது வெள்ளிக்கிழமை மகனே தேசிங்கு
இன்றைக்கிருந்து நாளைக்குப்போனால் மகனே தேசிங்கு
சண்டைஜெயித்து வருவாயோடா மகனே தேசிங்கு
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் ராஜா தேசிங்கு
கலகலவென்று சிரித்தானையா சிப்பாய் தேசிங்கு
என்னபேச்சுப் பேசினீரையா சிற்றப்ப ராஜாவே
நானொருசேதி சொல்கிறேன்கேளும் சிற்றப்ப ராஜாவே
இத்தனைநாளும் நவாப்புஜனங்க ளிங்கே வந்ததோ
இப்போ-கோட்டையைச்சுற்றி வளைந்திருக்குது நவாப்பு பாளையமும
கோட்டைகொள்ளை யடித்தாரையா சிற்றப்ப ராஜாவே
இரங்கர்கோயிலில் துலுக்கன்வந்தால் சும்மா யிருப்பேனோ
டாறுடாறுய்க் கிழித்துப்போடுறேன் நவாப்பு பாளையத்தை
நவாப்பைவெட்டி ஜெஞ்சிக்குவாரேன் சிற்றப்ப ராஜாவே
இராஜகுலத்தில் நானும்பிறந்தேன் ரோஷக் காரனாக

ஆறிலுஞ்சாவு நூறிலுஞ்சாவு சிற்றப்ப ராஜாவே
பிறந்தவன்றைக்கே சாவிருக்குது சிற்றப்ப ராஜாவே
நான்-முன்வைத்தகாலைப் பின்வைப்பேனோ சிற்றப்ப ராஜாவே
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் சிற்றப்ப ராஜாவும்
என்னபேச்சு பேசினாயடா மகனே தேசிங்கு
என்வார்த்தைநீ கேட்கிறதில்லை மகனே தேசிங்கு
உன்னையெடுத்து நானும்வளர்த்தேன் மகனே தேசிங்கு
உன்னிடம்சோறு நான்தின்னவில்லை மகனே தேசிங்கு
என்தன்சோறு நீயேதின்றாய் மகனே தேசிங்கு
ஆறுமாதம் ஆகாதென்று நம்மிட குருசொன்னார்
மூன்றுமாதம் ஆச்சுதடா மகனே தேசிங்கு
இன்னம்-மூன்றுமாதம் போகவேணும் மகனே தேசிங்கு
அந்தப்பேச்சு காதிலேகேட்டான் ராஜா தேசிங்கு
கண்கள்சிவந்து கோபமாச்சுது ராஜாவுக் கானாலும்
கோபம்வருவதைக் கண்ணாலேகண்டான் சிற்றப்ப ராஜாவும்
நானொருபேச்சு சொல்கிறேன்கேளும் மகனே தேசிங்கு
நடுவில்திரையை போடச்சொல்லும் மகனே தேசிங்கு
திரைக்கப்பாலே யிருந்துபேசடா மகனே தேசிங்கு
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் ராஜா தேசிங்கு
ஆனால்நல்ல தாகட்டுமென்றான் சிப்பாய் தேசிங்கு
பெரியஅரண்மனை வாறானையா ராஜா தேசிங்கு

## தேசிங்கு ராணியிடம் வருதல்.

ராணியாண்மனை வந்துநின்றான் ராஜா தேசிங்கு
அதற்குமுன்னமே திரைகட்டினார் சோபுதார் மார்களும்
சோபுதார்மாரைக் கண்ணாலேகண்டான் ராஜா தேசிங்கு
ஜல்திஜல்தி ராணியையழையும் சோபுதார் மார்களே
என்றவுடனே சோபுதார்மார்கள் இசைந்த தோழிமாரும்
அழைத்துமன்னன் ராணியைநீங்கள் கூட்டிவா வென்னவே
நல்லதென்று தாதிமார்கள் நடந்தார்கள் அப்போது
அம்மாகேளும் அம்மாகேளும் எங்கள் மாதாவே

எங்களையாளும் ராஜாவிப்போ உங்களை யழைக்கச்சொன்னார்
இந்தச்சேதியைக் காதிலேகேட்டாள் ராணி யம்மாளும்
மயிலைக்குயிலை மருளச்செய்யும் அன்னைராணி யம்மாள்
சந்தோஷங்கள் மிகவுண்டாகி சரீரம் பூரித்தாள்
மெத்தமனதி லாச்சரியமாக வியப்பினைத் தான்கொண்டாள்
ராஜனழைத்த காரியமறிய நலமா யெழுந்திருந்தாள்
சிங்காதனம்விட்டுக் கீழேகுதித்தாள் ராணி யம்மாளும்
மஞ்சள்நீர்சாலையில் வந்துபுகுந்தாள் மாது ராணியம்மாள்
சுத்தசலத்தில் ஸ்நானம்செய்தாள் சுந்தர ராணியம்மாள்
கஸ்தூரிமஞ்சள் நிறந்துலக்கினாள் கனக ராணியம்மாள்
இந்திரவர்ணப் பட்டுடுத்தினாள் எங்கள் ராணியம்மாள்
சீவிவகுத்துக் கொண்டையிட்டாள் திகழும் ராணியம்மாள்
வண்ணவிழிக்கு மையிட்டாளே மாது ராணியம்மாள்
சந்திரபிறைபோல் பொட்டுமிட்டாள் தங்க ராணியம்மாள்
கச்சையிறுக்கி முடிந்தாளையா காதலி ராணியம்மாள்
ரத்தினத்தாலே கோங்குமல்லிகை நாயகிமார் தரித்தார்
முத்துக்குச்சி கொப்புத்தொங்கல் முடிய தொங்கலிட்டார்
ரவைகளிழைத்த கம்மல்சிமிக்கை நற்கொப்பு மயிர்மாட்டி
நானிலம்புகழுங் கத்திரிபாவல் நலமாய்த் தரித்தார்கள்
கண்டசரங்கள் மோகனமாலை கழுத்திற் றரித்தார்கள்
கடகங்கணம் பொன்னின்வளையல் கரத்திற் றரித்தார்கள்
இடையிலொட்டியாணம் பலவிதகொலுசு இனிப்பாய் மாட்டினார்கள்
கலகலச்சுருள் கொலுசுடன்மற்றதுங் காலில் கொஞ்சிடவே
அரசனிருக்கு மாண்மனைக்குள்ளே வாறாள் ராணியம்மாள்
திரைக்கப்பாலே வந்துநின்றாள் ராணி யம்மாளும்
கலகலவென்றிடுஞ் சப்தம்ராஜன் காதிலே தான்கேட்டான்
திரையைக்கெட்டியா யிழுத்துபிடித்தான் ராஜா தேசிங்கு
திரையைப்பார்த்துக் கோபங்கொண்டாள் ராணி யம்மாளும்
என்னையழைத்த காரியமென்ன நடுவிலே திரையென்ன
இந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் ராஜா தேசிங்கு
நானொருசேதி சொல்லுகிறேன்கேள் என்தன் ராணியே

நவாப்புமேலே சண்டைக்குப்போகிறேன் என்தன் ராணியே
உனக்குச்சொல்லிப் போகவந்தேன் என்தன் ராணியே
ஜல்திஜல்தி யுத்தாரந்தாரும் என்தன் ராணியே
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டாள் ராணி யம்மாளும்
என்னபேச்சு பேசினீரையா என்தன் பிராணநாதா
ஐந்துவருஷம் சண்டைசெய்யலாம் நமது கோட்டைக்குள்ளே
கோட்டைவெளியே போகவேண்டாம் என்தன் பிராணநாதா
இந்தச்சேதி காதிலேகேட்டான் ராஜா தேசிங்கு
என்னபேச்சு பேசினையடி என்தன் கண்மணியே
பெண்புத்தி சண்டைக்கேற்குமோ என்பிராண நாயகியே
நானிப்போதே போய்விட்டுவாறேன் என்பிராண நாயகியே
என்னைக்-கலியாணம்பண்ணி மூலையில்வைத்தீர் என்பிராண நாதா
நான்-சந்தோஷசுகங்க ளொன்றுமறியேன் என்பிராண நாதா
நீர்-சண்டைக்குப்போக வேண்டாமையா என்பிராண நாதா
என்தன்பேச்சு தடுத்துப்போறீர் என்பிராண நாதா
சண்டைபண்ணி ஜெயிக்கமாட்டீர் என்பிராண நாதா
இந்தச்சவுரிய மிருக்கவேணும் என்பிராண நாதா
சண்டைக்குப்பயந்து வந்தீரானால் என்பிராண நாதா
கோட்டைக்கதவைச் சாத்திப்போடுவேன் என்பிராண நாதா
அலங்கத்துமேலே பீரங்கிஏத்துவேன் என்பிராண நாதா
அடியோடேநான் கொளுத்திப்போடுவேன் என்பிராண நாதா
ஆனால்சுகமாய் போய்வாரும்நீர் என்பிராண நாதா
கலகலவென்று சிரித்தானையா ராஜா தேசிங்கு
நானொருபேச்சு சொல்கிறேன்கேளும் என்தன் ராணியே
என்தன்மேலே கோபம்வேண்டாம் என்தன் நாயகியே
நானிப்போதே போய்விட்டுவாறேன் என்தன் நாயகியே
கோட்டைபத்திரம் பார்த்துக்கொள்ளும் என்தன் ராணியே
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டாள் ராணி யம்மாளும்
பாக்குவெற்றிலை கையிலேபிடித்தாள் ராணி யம்மாளும்
திரைக்குள்கையை நீட்டினாரையா ராஜா தேசிங்கு
பாக்குவெற்றிலை கையிலேவாங்கினான் ராஜா தேசிங்கு

இராஜன்கையை உள்ளுக்கிழுத்தாள் ராணி யம்மாளும்
கையைப்பார்த்து அழுகிறுளேயா ராணி யம்மாளும்
என்னகாரியம் பண்ணினீரையா என்பிராண நாதா
கையேயித்தனே யழகாயிருக்குதே என்பிராண நாதர்
உம்-முகமெத்தனே யழகாயிருக்குமோ என்பிராண நாதா
பாவிநான்செய்த பாவமிதுதானே என்பிராண நாதா
என்தலையெழுத்து மிப்படியிருக்குதோ என்பிராண நாதா
கையையெடுத்து கண்ணிலொற்றினுள் ராணி யம்மாளும்
கதறியழுது புலம்பினுளேயா ராணி யம்மாளும்
கண்ணீர்ஜலமுங் கையிலேகண்டான் ராஜா தேசிங்கு
என்னகாரியம் பண்ணிஞயடி என்தன் ராணியே
நானிப்போதே போய்விட்டுவாறேன் என்தன் ராணியே
இராணிவசத்தை விட்டுவாருன் ராஜா தேசிங்கு

## தேசிங்கு ராணியிடம் விட்டு கோலுவுக்கு வருதல்.

சிங்காரமாளிகையில் வந்தானேயா ராஜா தேசிங்கு
கண்ணையுருட்டிக் கதும்பினுனேயா ராஜா தேசிங்கு
ஜல்திஜல்தி குதிரைகொண்டாரும் அர்க்காரு மார்களே
சலாம்வாங்கித் திரும்பினுரையா அர்க்காரு மார்களும்
குதிரைலாயத்தில் வந்தாரையா அர்க்காரு மார்களும்
குதிரைப்பாகரைக் கண்டுசொல்கிறுர் அர்க்காரு மார்களும்
ஜல்திஜல்தி குதிரைகொண்டுவா குதிரைப் பாகனே
ஆனுல்நல்ல தாகட்டுமென்றுன் குதிரைப் பாகனும்
நாலுகாலுக்கு வெண்டயம்போட்டார் பாரா சாரிக்கு
நடுவிலேசுங்கு விட்டாரையா பாரா சாரிக்கு
கழுத்திலேசாம் போட்டாரையா பாரா சாரிக்கு
கன்னத்துகண்ணுடி கட்டினுரையா பாரா சாரிக்கு
தங்கத்தாலே ஜீனிபோட்டார் பாரா சாரிக்கு
வாய்க்குத்தங்கக் கடிவாளம்போட்டார் பாரா சாரிக்கு
குதிரையைக்கொண்டு நிறுத்தினுரையா குதிரைப் பாகரும்

## தேசிங்குராஜன் குதிரை வந்ததைக் காணல்.

குதிரைவந்ததைக் கண்ணாலேகண்டான் ராஜா தேசிங்கு
தனக்கென்றுவளர்த்த பாராசாரியை முன்னே வரச்சொன்னான்
முன்னேவந்து நிற்குதையா பாரா சாரியும்
குதிரைக்குச்சேதி சொல்கிறானையா ராஜா தேசிங்கு
நவாப்புமேலே சண்டைக்குப்போறேன் பாரா சாரியே
சண்டைஜெயித்து வந்தேனானால் பாரா சாரியே
தங்கத்தால்முத்து துராபோடுறேன் பாரா சாரியே

## குதிரை விசனப்படல்.

சாகிறோமென்று தெரிந்துதையா பாரா சாரிக்கு
கோடுகோடென்று யழுகுதையா பாரா சாரியும்
தரையைத்தரையைப் பார்க்குதந்த பாரா சாரியும்
பூமியிற்காலைப் புரட்டுதந்த பாரா சாரியும்
வாயைசும்மா மெல்லுதந்த பாரா சாரியும்
மிளமிள கண்ணைச்சுழற்றுது பாரா சாரியும்
திரேகம்படபட வென்றுநடுங்குது பாரா சாரிக்கு
வாலைச்சுழற்றி விசிறிதட்டுது பாராசாரி குதிரை
குதிரைமுகத்தைக் கண்ணாலேகண்டான் ராஜா தேசிங்கு

## தேசிங்கு பாராசாரிக்குத் திடஞ்சோல்லல்.

என்னகாரியம் பண்ணினாயடா பாரா சாரியே
பன்னீராயிரம் வராகன்கொடுத்து உன்னை வாங்கினேனே
முப்பதினாயிரம் வராகன் தின்றாய் பாரா சாரியே
தண்ணீர்வைத்தா லாகாதென்று சாராயம் வைத்தேனே
கொள்ளுவைத்தா லாகாதென்று கடலை வைத்தேனே
மெத்தைபோட்டு வளர்த்தேனுன்னை பாரா சாரியே
ஆயிரங்கட்டு புல்லிலேநல்ல ஒருகட்டு புல்லை
பொறுக்கிப்போட்டு வளர்த்தேனடா பாரா சாரியே
சாகத்தானே பயப்பட்டாய்நீ பாரா சாரியே
ஆறிலுஞ்சாவு நூறிலுஞ்சாவு பாரா சாரியே

பிறந்தவன்றைக்கே சாவிருக்குது பாரா சாரியே
சண்டைமுனையிலே செத்தோமானால் பாரா சாரியே
ஜல்திமோட்சங் கிடைக்குமேடா பாரா சாரியே
நீ-செத்தயிடத்தில் நானுஞ்சாகிறேன் பாரா சாரியே
ஒன்றுக்குமஞ்ச வேண்டாம்நீ பாரா சாரியே
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டது பாரா சாரியும்

## பாராசாரி தைரியங்கொள்ளல்.

சந்தோஷமாக கனைத்ததுபாரு பாரா சாரியும்
ராஜன்முன்னே வந்துநின்றது பாரா சாரியும்
நெற்றிமயிரைத் திருத்தினானையா பாரா சாரிக்கு
வெள்ளிசமுக்காளம் போட்டானையா பாரா சாரிக்கு
லகானிழுத்துக் கையிலேபிடித்தான் ராஜா தேசிங்கு
நாராயணா கோவிந்தாவென்று குதிரை யேறினாம்
அந்தவேளையி லென்னபண்ணுறான் சிற்றப்ப ராஜாவும்
சிற்றப்பதுரை தரணிசிங்கும் குதிரை யேறினாம்
இராமுசிங்கு லட்சுமணசிங்கு குதிரை யேறினாம்
இராமுதாரி லட்சுமணதாரி குதிரை யேறினாம்
மான்சிங்கு கிரிபுசிங்கு குதிரை ஏறினாம்
பேட்டைசிப்பாய் மோவுத்துக்காரனும் குதிரை ஏறினாம்
முந்நூறுகுதிரை புறப்பட்டதையா ராஜன் முன்னாலே
இடதுகாலுக்கு சிமிட்டாகொடுத்தான் பாரா சாரிக்கு
சுற்றிவந்து சலாம்வாங்குது பாரா சாரியும்
பரதநாட்டிய மாடிவருகுது பாரா சாரியும்
அந்தவேளையி லென்னபண்ணுறான் ராஜா தேசிங்கு
குதிரையைவிட்டுக் கீழேகுதித்தான் சிப்பாய் தேசிங்கு
கோயில்மடப்பளி புகுந்தானையா ராஜா தேசிங்கு
என்னென்னவகை யெடுத்தானையா ராஜா தேசிங்கு
புனுகுசவ்வாது அத்தர்சவ்வாது கையிலே பிடித்தானும்
வெட்டிவேரு மருக்கொழுந்தும் கையிலே பிடித்தானும்
கண்டமாலை தண்டமாலை கையிலே பிடித்தானும்

பொன்னின்செம்பிலே பன்னீரங்கே மொண்டுக் கொண்டானும்
பொன்னினுலே திருமண்ணங்கே நெற்றியி லிட்டானும்
தூங்காவிளக்கை யேற்றிவைத்தான் ராஜா தேசிங்கு
நானொருசேதி சொல்கிறேன்கேளும் ரங்க நாதரே
நவாப்புமேலே சண்டைக்குப்போறேன் ரங்க நாதரே
சண்டைகெலிக்க உத்தாரந்தாரும் ரங்க நாதரே
சண்டைகெலித்து வந்தேனேயானுல் ரங்க நாதரே
தங்கத்தாலே கலசம்வைக்கிறேன் ரங்க நாதரே
சண்டைமுனையில் தப்பித்துக்கொள்ள ரங்க நாதரே
எனக்குநல்ல வரந்தரவேணும் ரங்க நாதரே
நன்மைதுன்மை யிரண்டுமென்தன் கண்ணிற் காட்டாயோ
நாராயணு கோவிந்தாவென்று நாடி விழுந்தானும்
அரிநமோ நாராயணுவென்று அடியில் விழுந்தானும்
நந்தகோ பாலாவென்று சேவடி தொழுதானும்
பக்தவத்ஸலா கேசவாவென்று பாதத்தில் பணிந்தானும்
சங்குசக்ர கோதண்டாவென்று காலில் விழுந்தானும்
மதுசூதனு தாமோதராவென்று மலரடி பணிந்தானும்
கரிமுறையபயந் தீர்த்தவாவென்று கழலில் பணிந்தானும்
இப்படியாகத் தோத்திரஞ்செய்து யிருகரந் தனைக்கூப்பி
சரணஞ்செய்து எதிரிலேநின்றுன் ராஜா தேசிங்கு
என்னசகுன மாகுதையா ரங்கர் கோயிலிலே

## தேசிங்குராஜன் சகுனங்காணல்.

கண்டமாலை தண்டமாலை கருகிப் போயிற்று
கழுத்திலிருந்த முத்தாரங்கள் கழன்று விழுந்தனபார்
கண்ணீர்நிறைய தண்ணீர்சொரியுது ரங்க நாதருக்கு
மார்பின்மீது தண்ணீரோடுது ரங்க நாதருக்கு
அத்தர்சவ்வாது புனுகுபன்னீர் கரைந்து விழுந்தது
நெற்றியிலிருந்த திருமணியப்போ நிலத்தில் விழுந்ததுவாம்
கழுத்திலிருந்த துளசிமாலை கழன்று விழுந்ததுபார்
ஏற்றிவைத்த திருவிளக்கங்கே திட்டென் றவிந்தது

எதிரிலிருந்த கோபுரமங்கே யிடிந்து விழுந்தது
பக்கத்திலிருந்த லட்சுமியங்கே பதறி விழுந்தாளாம்
எதிரிலிருந்த கருடஸ்தம்பம் இரண்டாய் விழுந்ததுபார்
கிழக்குமுகத்தி லிருந்தசாமி மேற்கே திரும்பினாராம்
இத்தனைசகுனங் கண்ணாலேகண்டான் ராஜா தேசிங்கு
கோபம்வந்து மூண்டுகொண்டது ராஜாவுக் காணும்
உனக்-கென்னகேடு வந்ததுசாமி ரங்க நாதரே
நானல்லவோ பயப்படவேண்டும் ரங்க நாதரே
நீர்சொன்னால்நான் பயப்படுவேனே ரங்க நாதரே
நான்-முன்வைத்தகாலை பின்வைப்பேனே ரங்க நாதரே
நீ-சாகவுமாட்டாய் பிறக்கவுமாட்டாய் ரங்க நாதரே
ஓரேஜனன மெடுத்தீரையா ரங்க நாதரே
இன்னொருசேதி சொல்கிறேன்கேளும் ரங்க நாதரே
நானிப்போதே போய்விட்டுவாறேன் ரங்க நாதரே
என்னை-அனியாயமாய்க் கொல்லவேண்டாம் ரங்க நாதரே
முடிவுசண்டையில் கொல்லுமையா ரங்க நாதரே
நானைசெத்தாலும் பிழைத்தாலும் ரங்க நாதரே
உன்பாதத்திற் சேர்த்துக்கொள்ளும் ரங்க நாதரே
கும்பிட்டுக்கொண்டு வந்தானையா ராஜா தேசிங்கு
கோயில்வெளியில் வந்தானையா ராஜா தேசிங்கு
கண்ணையுருட்டிக் கதும்பினானையா ராஜா தேசிங்கு
பன்னிரண்டங்கு படிவைத்தகுதிரை முன்னுக்கு வந்தது
நாராயணா கோவிந்தாவென்று குதிரை யேறினானும்
அச்சுதா பரந்தாமாவென்று அசுவ மேறினானும்
இரங்கர்கோயிலை வலமாகவந்தான் ராஜா தேசிங்கு
இடதுகாலுக்கு சிமிட்டாகொடுத்தான் ராஜா தேசிங்கு
போடுபோடென்று போறானையா ராஜா தேசிங்கு
கோட்டையைவிட்டு வெளியேவந்தான் ராஜா தேசிங்கு
அந்தவேளையி லென்னபண்ணுறான் பங்காரு நாய்க்கனும
பாராசாரி வருவதைப்பார்த்து நவாப்பு பாளையமும்
அல்லோலகல்லோல மாகுதையா நவாப்பு பாளையமும்

கள்ளக்குறிச்சிக் கோடிப்போகுது நவாப்பு பாளையமும்
திருவண்ணுமலைக் கோடிப்போகுது நவாப்பு பாளையமும்
கணவாக்குறிச்சிக் கோடிப்போகுது நவாப்பு பாளையமும்
புலியாயிருந்த பாளையமெல்லாம் பூனையாய்ப் போச்சுது
முக்காதவழிக்குப் பாவியிருக்குது நவாப்பு பாளையமும்
அந்தவேளையி லென்னபண்ணுறுன் பங்காரு நாய்க்கனும்
நவாப்பருகே ஓடிவந்தான் பங்காரு நாய்க்கனும்

## பங்காருநாய்க்கன் நவாப்புக்குத் தேசிங்குசேதி சொல்லல்.

சலாமையா சலாமையா நவாப்பு சைதுல்லா
நாஞெருசேதி சொல்கிறேன்கேளும் நவாப்பு சைதுல்லா
எமனைப்போலே வாரானையா ராஜா தேசிங்கு
சிங்கம்போலே வாரானையா ராஜா தேசிங்கு
புலியைப்போலே வாரானையா ராஜா தேசிங்கு
யானையைப்போலே வாரானையா ராஜா தேசிங்கு
வருகுமுன்னமே வீசிப்போவோன் ராஜா தேசிங்கு
இதற்கோருபாயஞ் சொல்கிறேன்கேளும் நவாப்பு சைதுல்லா
ஆலமாமு முழுகியிருக்குது தாழனூ ரேரியிலே
பனைமாமு முழுகியிருக்குது மலையனூ ரேரியிலே
பதின்காதவழிக்குப் பாவியிருக்குது யிரண்டேரித் தண்ணீர்
இரண்டேரியும் வெட்டித்திருப்புகிறேன் சங்கரா பரணியிலே
தண்ணீர்மேலே வரவேமாட்டான் ராஜா தேசிங்கு
சாவகாசமாய்ப் போகலாமையா நவாப்பு சைதுல்லா
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் நவாப்பு சைதுல்லா

## நவாப்பு பங்காருநாய்க்கனுக்கு ஏரியை வெட்ட உத்தரவு கொடுத்தது.

மாறுமாறென்று உத்தாரங்கொடுத்தான் நவாப்பு சைதுல்லா
சலாம்வாங்கித் திரும்பினுனையா பங்காரு நாய்க்கனும்
ஐந்நூறுபேர் வேலைக்காரரைக் கூட்டிப் போனனும்

ஏரிகரைமேலே வந்தானையா பங்காரு நாய்க்கனும்
இரண்டேரியும் வெட்டித்திருப்பினான் பங்காரு நாய்க்கனும்
கீழ்மண்ணு மேல்மண்ணாகுது சங்கார பாணியிலே
தலைக்குமேல்மட்டம் ஓராளுயரம் தண்ணீ ரோடுகுது
பாம்புபோலே புரண்டுவருகுது சங்கார பாணியிலே
ஏரியைவெட்டி நவாப்புபாளையம் வந்து சேர்ந்தாராம்
பாளையத்தில் வந்தானையா பங்காரு நாய்க்கனும்
வருகுமுன்னே தயார்பண்ணினான் பங்காரு நாய்க்கனும்
திருவண்ணாமலை சுபங்கிதுரையும் முன்னே வந்தானும்
இரண்டாங்கணவா யவுல்தாரையா மோவுத்துக் காரனும்
மூன்றாங்கணவா வாலிகொண்டான் மோவுத்துக் காரனும்
நாலாங்கணவா யெட்டியாபுரம் பாளையக் காரனும்
ஐந்தாங்கணவா செங்கற்பட்டு பாளையக் காரனும்
ஆறாங்கணவா யரியலூரு பெரிய துரைதானும்
ஏழாங்கணவா பாஞ்சாலக்குறிச்சி பாளையக் காரனும்
எட்டாங்கணவா ஆரணிகோட்டை வேங்கட ராயனும்
ஒன்பதாங்கணவா யூகம்வகுத்தான் ஷேக்கு முகம்மதையா
பந்தோபஸ்தா யிருக்குதையா நவாப்பு பாளையமும்
பாளையநடுவி லிருக்கின்றானையா நவாப்பு சைதுல்லா
அந்தவேளையி லென்னபண்ணுறான் ராஜா தேசிங்கு
நவாப்பெங்கே யெங்கேயென்று யிவனும் வந்தானும்
பக்கத்திலிருக்குஞ் சமேதார்மாரும் கண்ணாலே கண்டாராம்

## தேசிங்குராஜன் சேனைகளுக்குச் சொல்லல்.

அண்ணமாரே தம்பிமாரே சமேதாரு மாரே
நானொருசேதி சொல்கிறேன்கேளும் சமேதாரு மாரே
எனக்குத்-தெய்வபலமு மில்லையடா சமேதாரு மாரே
என்-கைபலங்கொண்டு போர்றேனடா சமேதாரு மாரே
பாலுஞ்சோறுந் தின்கிறவரானால் செஞ்சிக்குப் போங்களடா
இரத்தமுஞ்சோறுந் தின்கிறவரானால் என்பின்னே வாங்களடா
பெண்சாதிமுகத்தில் விழியாதவரானால் என்பின்னே வாங்களடா

சண்டைபண்ணி செலித்தோமானல் சல்தி மோட்சமுண்டு
போர்க்களத்தில் செத்தோமானல் புகழுங் கீர்த்தியுண்டு
ரணக்களத்தில் செத்தோமானல் நல்ல பதவியுண்டு
சாவுக்கென்றும் பயப்படவேண்டாம் சமேதாரு மாரே
சல்திசல்தி வாருமென்றான் ராஜா தேசிங்கு
சங்கராபரணி கரையிலேவந்தான் ராஜா தேசிங்கு
ஆற்றிலேதண்ணீர் வருவதைக்கண்டான் ராஜா தேசிங்கு
சிற்றப்பன்முகத்தைத் திரும்பிப்பார்த்தான் ராஜா தேசிங்கு

## தேசிங்குராஜன் சிற்றப்பனுக்குச் சொல்லல்.

ஐயீர்கேளு மையாகேளும் சிற்றப்ப ராஜாவே
இரண்டுநாழிக்குமுன் தண்ணீரில்லையே சிற்றப்ப ராஜாவே
இப்போது-தண்ணீர்வந்த வயணமென்ன சிற்றப்ப ராஜாவே
நானொருசேதி சொல்கிறேன்கேளும் ராஜா தேசிங்கு
இந்தச்சீமை கொள்ளைக்காரன் பங்காரு நாய்க்கனும்
தாழனூரேரி மலையனூரேரி தள்ளி வெட்டினனும்
இரண்டேரித்தண்ணீர் புரண்டுவருகுது மகனே தேசிங்கு
இரண்டுநாழியில் வற்றிப்போகும் இந்த ஏரித்தண்ணீர்
பிற்பாடுபுறப்பட்டுப் போகலாமடா மகனே தேசிங்கு
கலகலவென்று சிரித்தானையா ராஜா தேசிங்கு
என்னபேச்சு பேசினீரையா சிற்றப்ப ராஜாவே
எனக்கு-பயந்துதண்ணீர் கொண்டுவந்தான் நவாப்பு சைதுல்லா
தண்ணீர்க்குப்பயப்பட் டிருப்பேனோநான் சிற்றப்ப ராஜாவே
பயந்துபோனல் விடுவேனோநான் சிற்றப்ப ராஜாவே
என்று-கனைத்துக்கதும்பித் தட்டினனையா பாரா சாரியை
ஆற்றில்அக்கரை யிரண்டுநாழிவழி சங்கரா பரணியாறு
தண்ணீர்வந்ததைப் பார்த்தானையா ராஜா தேசிங்கு
இடதுகாலுக்குச் சிமிட்டாகொடுத்தான் பாரா சாரிக்கு
பன்னிரண்டங்கு படிவைத்தகுதிரை பாராசாரி குதிரை
அந்தநாழிகைக்கு கண்ணுலேகண்டார் சமேதாரு மாரும்
நத்தர்சிங்கு கோபால்சிங்கு ஆற்றிலே குதித்தாராம்

சிற்றப்பதுரை தரணிசிங்கு ஆற்றிலே குதித்தாராம்
ராமுசிங்கு லட்சுமணசிங்கு ஆற்றிலே குதித்தாராம்
ராமுதாரி லட்சுமணதாரி ஆற்றிலே குதித்தாராம்
பேட்டைசிப்பாய் மோவுத்துக்காரனும் ஆற்றிலே குதித்தானும்
சிலர்-ஆற்றுத்தண்ணீரைப் பார்த்துப்பயந்தார் சமேதாரு மாரும்
பயந்துகுதிரை திரும்பிப்போச்சுது செஞ்சிக் கோட்டைக்குள்ளே
முப்பதுகுதிரையைக் கண்ணாலேகண்டான் ராஜா தேசிங்கு
முப்பதுகுதிரையும் சலாம்வாங்குது ராஜாவுக் கானும்
பதில்சலாமுங் கொடுத்தானையா ராஜா தேசிங்கு
முப்பதுகுதிரைக்குச் சர்தாரையா மோவுத்துக் காரனும்
நவாப்புபாளையத்தைத் திரும்பிப்பார்த்தான் மோவுத்துக் காரனும்
கண்ணாலேகண்டான் கோபமாச்சுது மோவுத்துக் காரனுக்கு
இடதுகாலுக்குச் சிமிட்டாகொடுத்தான் நீல வேணிக்கு
காகாவென்று சுழன்றுவருகுது நீலவேணி குதிரை
ராஜாமுன்னே சுற்றிவந்தான் மோவுத்துக் காரனும்
குதிரையைவிட்டுக் கீழேகுதித்தான் மோவுத்துக் காரனும்

## மோவுத்துக்காரன் சண்டைக்குப்போக தேசிங்கைக் கேட்டல்.

மண்டிபோட்டு சலாம்வாங்கினான் மோவுத்துக் காரனும்
நானொருசேதி சொல்கிறேன்கேளும் ராஜா தேசிங்கு
முதற்சண்டைக்கு உத்தாரந்தாரும் ராஜா தேசிங்கு
சந்தோஷமாக உத்தாரந்தாரும் ராஜா தேசிங்கு
முதல்யூகத்தி லிருக்கிறானையா சுபங்கி துரைதானும்
கடைசியூகத்தி லிருக்கிறானையா நவாப்பு சைதுல்லா
இரண்டுபேரையும் வெட்டிகெலிக்கிறேன் ராஜா தேசிங்கு
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் ராஜா தேசிங்கு
கலகலவென்று சிரித்தானையா ராஜா தேசிங்கு

## தேசிங்குராஜன் மோவுத்துக்காரனுக்குச் சொல்லல்.

என்னபேச்சு பேசினாயடா மோவுத்துக் காராநீ
அண்ணனுமில்லை தம்பியுமில்லை மோவுத்துக் காராநீ

கையிற்கங்கணங் கட்டியிருக்கிறாய் மோவுத்துக் காரா நீ
சண்டைமுகத்தைப் பார்த்தறியாயே மோவுத்துக் காரா நீ
ஒண்டியாய்ச்சண்டை பண்ணவேண்டாம் மோவுத்துக் காரா நீ
நானும்நீயும் புகுந்துவெட்டுவோம் மோவுத்துக் காரா நீ
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் மோவுத்துக் காரனும்
என்னபேச்சு பேசினீரையா ராஜா தேசிங்கு
நானும்நீயும் புகுந்துவெட்டினால் ராஜா தேசிங்கு
உமதுபேருண் டாகுமேயன்றி என்பேருண் டாகாது
சல்திசல்தி யுத்தாரந்தாரும் ராஜா தேசிங்கு
நான்-கத்திபிடித்த சிப்பாயானால் ராஜா தேசிங்கு
கால்நாழிநீர் கண்ணால்பாரும் ராஜா தேசிங்கு
நவாப்பின்பாளைய மெல்லாமிப்போ அதஞ்செய்யா விட்டால்
என்தன்பேரு மோவுத்துக்காரனென் றெண்ணு வார்களோ
தூள்தூளாகத் தும்சஞ்செய்கிறேன் துரகம் யாவற்றும்
அணுவணுவா யதஞ்செய்கிறேன் யானை யாவற்றும்
தவிடுபொடியாய்ச் சிதைத்துபோடுறேன் டேங்கள் யாவற்றும்
காற்றிலிலவம் பஞ்சாகச்செய்கிறேன் கனத்த படையெல்லாம்
அரைநாழிஎனக் குத்தாரந்தாரும் ராஜா தேசிங்கு
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் ராஜா தேசிங்கு
கலகலவென்று சிரித்தானையா ராஜா தேசிங்கு
நான்-என்னசொன்னாலும் கேளேனென்கிறாய் மோவுத்துக் காரனே
சந்தோஷமாகத் தலையையசைத்தான் ராஜா தேசிங்கு
முதற்சண்டைக் குத்தாரங்கொடுத்தான் ராஜா தேசிங்கு
சந்தோஷமாகச் செலவுவாங்கினான் மோவுத்துக் காரனும்

## மோவுத்துக்காரன் சண்டைக்குப் போகுதல்.

சலாம்வாங்கித் தாண்டினானையா நீலவேணி மேலே
இடதுகாலுக்குச் சிமிட்டாகொடுத்தான் நீல வேணிக்கு
காற்றுப்போலே பறக்குதையா நீலவேணி குதிரை
மேகம்போலே பறக்குதையா நீலவேணி குதிரை
ஒற்றைக்குதிரையைக் கண்ணாலேகண்டான் சுபங்கி துரைதானும்

## சுபங்கிதுரை தன் சேனைக்குச் சொல்லல்.

அண்ணமாரே தம்பிமாரே ஜமேதாரு மாரே
ஒற்றைக்குதிரைக் காரன்வாரான் ஜமேதாரு மாரே
ஜல்திஜல்தி பீரங்கிபோடும் ஜமேதாரு மாரே
ஆனால்நல்ல தாகட்டுமென்று ஜமேதாரு மாரும்
சொல்லிவாயை மூடுமுன்னமே ஜமேதாரு மாரும்
பளபளவென்று பளுத்தாதீர்த்தார் ஜமேதாரு மாரும்
பளுத்தாசத்தம் காதிலேகேட்டது நீல வேணிக்கு
குண்டுக்குமேலே ஜாணுயரம் வேகமாய்ப் பறக்குதுபார்
நடுத்தண்டிலே வந்துவிழுந்தது நீல வேணியும்
தண்டுக்குசைகை யூதினேயா சுபங்கி துரைதானும்
மோவுத்துக்காரனைக் கண்ணாலேகண்டான் சிப்பாய் துரைதானும்
மூவாயிரங்குதிரை வந்துவளைந்தது மோவுத்துக் காரனை
லகானைபிழுத்துக் கையிலேபிடித்தான் மோவுத்துக் காரனும்
பட்டாவுருவி கையிற்பிடித்தான் மோவுத்துக் காரனும்
ஆகாயவாணியை சாட்சிவைத்தான் மோவுத்துக் காரனும்
பூமிதேவியை சாட்சிவைத்தான் மோவுத்துக் காரனும்
இடதுகாலுக்குச் சிமிட்டாகொடுத்தான் மோவுத்துக் காரனும்
கரகரவென்று சுழன்றுவருகுது நீலவேணி குதிரை
குதிரைசுழன்ற நிமிஷத்திற்குள் மோவுத்துக் காரனும்
வடக்குமுகம் திரும்பினேயா மோவுத்துக் காரனும்
அங்கேயிருந்த ஆயிரம்குதிரை வந்து வளைந்தது
குதிரைகள்வந்ததைக் கண்ணாலேகண்டான் மோவுத்துக் காரனும்
இடதுகாலுக்குச் சிமிட்டாகொடுத்தான் நீல வேணிக்கு
கரகரவென்று சுழலுதுபாரு நீலவேணி குதிரை
குதிரைசுழன்ற நிமிஷநாழிக்கு மோவுத்துக் காரனும்
கண்கள்சிவந்து பொறிகள்பறக்க மோவுத்துக் காரனும்
கனைத்துக்கதும்பி மீசையுருவியே மோவுத்துக் காரனும்
கத்தியெடுத்து வீசினேயா மோவுத்துக் காரனும்
அங்கேயிருந்த ஆயிரங்குதிரை டாருய் விழுந்தது
மேற்குப்பக்கந் திரும்பினேயா மோவுத்துக் காரனும்

அங்கேயிருந்த ஆயிரங்குதிரை வந்து வளைந்தது
குதிரைவருவதைக் கண்ணாலேகண்டான் மோவுத்துக் காரனும்
இடதுகாலுக்குச் சிமிட்டாகொடுத்தான் நீல வேணிக்கு
காகாவென்று சுழலுதுபாரு நீலவேணி குதிரை
குதிரைசுழன்ற நிமிஷநாழிக்கு மோவுத்துக் காரனும்
குடல்கள்சரிந்திட சிலகுதிரைகள் வந்து விழுந்ததுபார்
தலைகள்துண்டாய் சிலகுதிரைகள் தவறி விழுந்ததுபார்
இடதுகாலுக்குச் சிமிட்டாகொடுத்தான் நீல வேணிக்கு
சிங்கம்போலே வாரானையா மோவுத்துக் காரனும்
புலியைப்போலே புகுந்தானையா மோவுத்துக் காரனும்
துணடுதுண்டாய் தூக்கிவெட்டுறான் மோவுத்துக் காரனும்
தலைதலையா யுருட்டிப்போடுறான் மோவுத்துக் காரனும்
சப்பைசப்பையாக் கிழித்துபோடுறான் மோவுத்துக் காரனும்
கால்மாடுதலைமாடாய் போகுதுபாரு நவாப்பு பாளையமும்
அந்தவேளையி லென்னபண்ணுறான் சுபங்கி துரைதானும்
மூவாயிரம் பீரங்கியை தயார் பண்ணினுனை
சுற்றிலுமிருக்கிற சிப்பாய்மாரும் பளுத்தா தீர்த்தார்கள்
அத்தனைகுண்டுக்கு தப்பிவருகுது நீலவேணி குதிரை
ஒருகுதிரைமே லாயிரங்குதிரை வந்து வளைந்தது
ஆயிரங்குதிரையைத் தாண்டிவருகுது நீலவேணி குதிரை
ஒருகத்தியின்மே லாயிரங்கத்தி வந்து விழுந்தது
ஆயிரங்கத்தியைத் தள்ளிவெட்டுறான் மோவுத்துக் காரனும்
மருந்துபுகையில் புகுந்துவெட்டுறான் மோவுத்துக் காரனும்
தலைதெரியாமல் புகுந்துவெட்டுறான் மோவுத்துக் காரனும்
கிழக்குப்பக்கந் திரும்பினானையா மோவுத்துக் காரனும்
அங்கேயிருந்த ஆயிரங்குதிரை வந்து வளைந்தது
மார்கள்பிளந்திடவே சிலகுதிரைகள் மாய்ந்து வீழ்ந்ததுபார்
மண்டைதிறந்து மூளைசிதறிட மாய்ந்தன சிலகுதிரை
இப்படியுசகச சிதைத்துக்தறித்து இம்சைகள் செய்தபின்பு
சிந்தைமகிழ்ந்து சிமிட்டாகொடுத்தான் நீலவேணிக் கப்போ
அங்கேயிருந்து தண்டில்புகுந்தது நீலவேணி குதிரை

தண்டில்புகவே சந்தோஷமானன் மோவுத்துக் காரனும்
பாளையங்களைக் கண்ணாலேகண்டான் மோவுத்துக் காரனும்
கொசுக்கள்போலே தேய்ப்பேனென்றான் மோவுத்துக் காரனும்
தூசிபோலூதி விடுவேனென்றான் மோவுத்துக் காரனும்
பஞ்சுபோல்பறக்க விடுவேனென்றான் மோவுத்துக் காரனும்
மெத்ததைரியம் கொண்டுதிரிகிறான் மோவுத்துக் காரனும்
அரிந்தரிந்து போட்டானையா மோவுத்துக் காரனும்
முன்வீச்சுக் காயிரம்விழுந்தது நவாப்பு பாளையமும்
பின்வீச்சுக் காயிரம்விழுந்தது நவாப்பு பாளையமும்
தெற்கேயிருந்த சுபங்கிதுரையைக் கண்ணாலே கண்டான்
ஆனையின்மே லம்பாரிபோட்டு அவனு மிருக்கின்றான்
அந்தவேளையி லென்னபண்ணுறான் மோவுத்துக் காரனும்
ஆனைக்கூட்டங்கள் மெத்தயிருக்குது சுபங்கி துரையண்டை
ஆனைவேடிக்கை பார்த்துவாறான் மோவுத்துக் காரனும்
குதிரைவருவதைக் கண்ணாலேகண்டான் சுபங்கி துரைதானும
ஆயிரம்யானையை முன்னேதூரத்தினன் சுபங்கி துரைதானும்
ஆனைவருவதைக் கண்ணாலேகண்டான் மோவுத்துக் காரனும்
கலகலவென்று சிரித்தானையா மோவுத்துக் காரனும்
பாலாவுருவி கையிலேபிடித்தான் மோவுத்துக் காரனும்
இடதுகாலுக்குச் சிமிட்டாகொடுத்தான் நீல வேணிக்கு
யானைக்குமேலே ஜானுயரம் அதிர்ந்து பாய்கிறது
குதிரைபோகிற வேகத்தினாலே குத்தி சாய்க்கிறானும்
காகாவென்று சுழன்றுவருகுது நீலவேணி குதிரை
கால்மாடு தலைமாடாக குத்தி சாய்க்கிறானும்
கடகடவென்று சாகுதுபாரு யானைக ளானதும்
ஆயிரம்யானையைக் குத்தியுருட்டினன் மோவுத்துக் காரனும்
தெற்கேயிருந்த சுபங்கிதுரையைக் கண்ணாலே கண்டானும்
இடதுகாலுக்குச் சிமிட்டாகொடுத்தான் நீல வேணிக்கு
முன்னங்காலைத் தூக்கிவைத்தது யானை தலைமேலே
பாலாவுருவி கையிலேபிடித்தான் மோவுத்துக் காரனும்
அல்லாகுஅல்லாகு வென்றுபோட்டான் பாலா தன்னாலே

முன்னேயிருந்த மாவெட்டியானும் நிலத்தில் விழுந்தானும்
மாருக்குபாலா யிழுத்துபிடித்தான் மோவுத்துக் காரனும்
ஓடிப்போகிறே ளுடிப்போகிறேன் மோவுத்துக் காரனே
ஓடிப்போகிற சிப்பாய்மகனும் சண்டைக் கேன்வந்தாய்
சௌரியமில்லா தவனேநீயும் சண்டைக் கேன்வந்தாய்
இனியில்லாத கோபமாச்சுது மோவுத்துக் காரனுக்கு
வலதுகையைப் பிடித்தானையா மோவுத்துக் காரனும்
வலதுகையுந் தானுமாகவே பூமியில் விழுந்தானும்
இடதுகையில் சலாம்வாங்கினன் சுபங்கி துரைதானும்

## சுபங்கிதுரை மோவுத்துக்காரனை வணங்கிக் கேட்குதல்.

நானொருசேதி சொல்கிறேன்கேளும் மோவுத்துக் காரனே
உன்தன்மேலே சண்டைக்குவரவில்லே மோவுத்துக் காரனே
பெண்சாதியிழந்தேன் தெண்டமையா மோவுத்துக் காரனே
பிள்ளையிழந்தேன் அல்லாவறிய மோவுத்துக் காரனே
ஊருமிழந்தேன் பதியுமிழந்தேன் மோவுத்துக் காரனே
நீசொன்னபடி நானுங்கேட்பேன் மோவுத்துக் காரனே
சோறுகூட தின்னவில்லே மோவுத்துக் காரனே
நானிப்போதே ஓடிப்போகிறேன் மோவுத்துக் காரனே
இப்போதென்னை விட்டுவிடவேண்டும் மோவுத்துக் காரனே
ஆனால்நல்ல தாகட்டும்போடா சுபங்கி துரையேநீ
ஒற்றைக்கையோடு யோடிப்போனனும் சுபங்கி துரைதானும்
அந்தவேளையி லென்னபண்ணுறுன் மோவுத்துக் காரனும்
இடதுகாலுக்குச் சிமிட்டாகொடுத்தான் நீல வேணிக்கு
நவாப்புஎங்கே எங்கேயென்று இவனும் வாறுனும்
குதிரைவருவதைக் கண்ணலேகண்டது நவாப்பு பாளையமும்
அல்லோலகல்லோல மாகியோடுது நவாப்பு பாளையமும்
அங்கேயிருந்து தண்டில்நுழைந்தான் மோவுத்துக் காரனும்
திமிரிக்கோட்டை ஷேக்முகம்மது வந்து எதிர்த்தானும்
ஷேக்முகம்மதைக் கண்ணலேகண்டான் மோவுத்துக் காரனும்

கலகலவென்று சிரித்தானையா மோவுத்துக் காரனும்
கண்ணுலேகண்டான் கோபமாச்சுது நவாப்பு பாளையத்தை
கத்தியெடுத்து நீலவேணியை கலங்கத் தட்டினனும்
தட்டினவுடனே நீலவேணியும் தண்டில் பாயுதுபார்
பாய்ந்தவுடனே ஷேக்முகம்மது பாலா யெடுத்தானும்
குத்தினகுத்து மோவுத்துக்காரன் கொண்டையில் பாய்ந்தது
பாய்ந்தஈட்டியை வலதுகையாலே பற்றி யெடுத்தானும்
கோபமிகவும் பொங்கிவந்தது மோவுத்துக் காரனுக்கு
ஜிவ்வென்றெழுந்து ஷேக்முகம்மது கையைப் பிடித்தானும்
கத்தியெடுத்து ஷேக்முகம்மது கழுத்தை வெட்டப்போனன்
அந்தவேளையி லென்னசொல்கிறன் ஷேக்முகம்மதையா

## ஷேக்முகம்மது மோவுத்துக்காரனை யிரங்கிக் கேட்குதல்.

சலாமையா சலாமையா மோவுத்துக் காரனே
அறியாமல்சண்டைக்கு வந்தேனையா மோவுத்துக் காரனே
என்-தலையைக்காக்க வேணுமையா மோவுத்துக் காரனே
தெய்வமும்நீரே தேசிகரும்நீரே மோவுத்துக் காரனே
அடிமைஎன்னை ஆதரிக்கவேணும் மோவுத்துக் காரனே
என்றுவணங்கி சலாம்செய்தான் ஷேக் முகம்மதையா
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் மோவுத்துக் காரனும்
பகையாளிகூட சண்டைக்குவந்தால் பாலன் விடுவேனே
ஈட்டியெறிந்த கையையிப்போ என்னிட வாளாலே
கண்டதுண்டமாய் வெட்டி யெறிவேன் ஷேக்முகம்மதுவே
இப்படிச்சொல்லி வெட்டி எறிந்தான் மோவுத்துக் காரனும்
கத்திபிடித்த சிப்பாய்மார்களைக் காணையாடி வாறன்
சலாம்வாங்கின சிப்பாய்மார்களை ஓடிப்போகச் சொன்னன்
பதினெட்டுவயது பாலனையா மோவுத்துக் காரனும்
ஒருகாலமும் சண்டையறியான் மோவுத்துக் காரனு
கைகளெல்லாம் ஓய்ந்துபோச்சுது மோவுத்துக் காரனுக்கு
இரத்தக்கவுனும் கவ்விக்கொண்டது மோவுத்துக் காரனுக்கு

களைகள்வந்து மூண்டுகொண்டது மோவுத்துக் காரனுக்கு
ராஜாவண்டை போகவேண்டுமென குதிரையைத் திருப்பினனும்
சந்தோஷமாகத் திரும்பினனையா மோவுத்துக் காரனும்
பாதநாட்டிய மாடிவருகுது நீலவேணி குதிரை
ராஜாமுன்னுக்கு வாரானையா மோவுத்துக் காரனும்
அந்தவேளைக்கு பதுங்கியிருந்தார் தப்பின குண்டுக்காரர்
இரட்டைகுண்டு பார்பண்ணிக்கொண்டு படுக்கென்று சுட்டாராம்
படுக்கென்றசத்தம் திரும்பிப்பார்த்தான் மோவுத்துக் காரனும்
அந்தகுண்டு நெற்றியிற்பட்டது மோவுத்துக் காரனுக்கு
அல்லாரே அல்லாரேயென்று கீழே விழுந்தானும்
அரிகோவிந்தா வென்றுசொல்லிக் கீழே விழுந்தானும்
வைகுந்தபதவி சேர்ந்தானையா மோவுத்துக் காரனும்

## மோவுத்துக்காரன் இறந்ததைக் கண்டு நீலவேணி விசனப்படல்.

சுற்றிச்சுற்றி வருகுதையா நீலவேணி குதிரை
முகந்துமுகந்து அழுகுதையா நீலவேணி குதிரை
கண்ணில்நீரும் பொங்கிவருகுது நீல வேணிக்கு
கடகடவென்று புரண்டழுகுது நீலவேணி குதிரை

## மோவுத்துக்காரன் இறந்தபின்பு நவாப்பு பங்காரு நாய்க்கனை நீலவேணியைக் கொண்டுவரச் சொல்லல்.

அண்ணுவாடா தம்பிவாடா பங்காரு நாய்க்காநீ
மோவுத்துக்காரன் விழுந்துபோனன் பங்காரு நாய்க்காநீ
நீலவேணியைக் கொண்டுவரவேண்டும் பங்காரு நாய்க்காநீ
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் பங்காரு நாய்க்கனும்
குதிரைக்கூட்டத் துடனேபோனன் பங்காரு நாய்க்கனும்
அந்தக்-குதிரையையெல்லாம் சுற்றிப்பார்த்தது நீல வேணியும்
கனைத்துத்தும்பி யெழும்பிற்றுபாரு நீல வேணியும்
காகாவென்று சுழன்றுதையா நீல வேணியும்
இடசாரிவலசாரி யாகவந்தது நீல வேணியும்

வந்துபாய்ந்து உதைத்ததுபாரு நீல வேணியும்
காலினலே யெட்டியுதைத்தது நீல வேணியும்
வாலினலே வீசியடிக்குது நீல வேணியும்
வீறிட்டுக்கொண்டு விழுந்துசாகுது நவாப்பு தன்குதிரை
மூலைக்குமூலை துரத்தியுதைக்குது நீல வேணியும்
காலுதையால் விழுந்துசெத்தது ஐம்பது குதிரைகள்
திக்குமுக்கிட்டுச் சாகுதுபாரு குதிரைக ளனந்தம்
ஆயிரம்துருப்பு சிப்பாய்மாரும் அடியோடே போனர்கள்
குதிரைவிழுந்தது கண்ணலேகண்டது நீல வேணியும்
இராஜாபக்கம் போவோமென்று நீல வேணியும்

## மோவுத்துக்காரன் குதிரை தேசிங்குராஜனிடம் வருதல்.

இரண்டுதாண்டில் வந்துநின்றது ராஜா முன்பாக
கண்ணீர்நிறைய தண்ணீர்கலங்குது நீல வேணிக்கு
குதிரைமுகத்தைக் கண்ணலேகண்டான் ராஜா தேசிங்கு
என்னுடன்வளர்த்த தம்பிதானும் இறந்துபோய் விட்டானே
என்தன்பலமும் பாதிபோச்சுது ஜமேதாரு மாரே
குதிரையைவந்து கட்டிக்கொண்டான் ராஜா தேசிங்கு
என்னகாரியம் பண்ணியடா நீல வேணியேநீ
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டது நீல வேணியும்
இராஜன்முன்பாக நடக்குதுபாரு நீல வேணியும்

## மோவுத்துக்கார னிறந்ததைப்பார்த்து தேசிங்குராஜன் விசனப்படல்.

மோவுத்துக்காரன் முன்னேவந்தான் ராஜா தேசிங்கு
மண்டிபோட்டு உட்கார்ந்தானையா ராஜா தேசிங்கு
வாரியெடுத்து மடிமீதில்வைத்தான் ராஜா தேசிங்கு
முகத்தோடுமுகம் வைத்தானையா ராஜா தேசிங்கு
கோடுகோடென்று கதறியழுதான் ராஜா தேசிங்கு
என்னைவிட்டுநீ எப்படிப்போனய் மோவுத்துக் காரனே
எனக்குநல்ல இடந்தேடிவையும் மோவுத்துக் காரனே

நவாப்பைவெட்டி நானும்வருகிறேன் மோவுத்துக் காரனே
தனக்குத்தானே தைரியமானன் ராஜா தேசிங்கு
பெரியகுழியாய் வெட்டச்சொன்னன் ராஜா தேசிங்கு
லட்சம்பொன்னு தானங்கொடுத்தான் ராஜா தேசிங்கு
குழியில்தூக்கி வைத்தானையா மோவுத்துக் காரனை
மண்டிபோட்டு படுத்ததுபாரு நீலவேணி குதிரை
பட்டாவுருவி கையிலேபிடித்தான் ராஜா தேசிங்கு
இரண்டுதுண்டாகத் தீர்த்தானையா ராஜா தேசிங்கு

## மோவுத்துக்காரனையும் அவன் குதிரையையும் புதைத்தல்.

குதிரையைக்கூட புதைத்தானையா ராஜா தேசிங்கு
பெரியகோரி கட்டச்சொன்னன் ராஜா தேசிங்கு
அந்தவேளையி லென்னசொல்கிறன் ராஜா தேசிங்கு
நாராயணு கோவிந்தாவென்றன் ராஜா தேசிங்கு
அண்ணமாரே தம்பிமாரே ஜமேதாரு மாரே
நானொருசேதி சொல்கிறேன்கேளும் ஜமேதாரு மாரே
நான்போகட்டா நீர்வாரீரோ ஜமேதாரு மாரே
ஓடிப்போகிற சிப்பாய்மாரைத் துரத்தி வெட்டவேண்டாம்
பதுங்கியிருக்கிற சிப்பாய்மாரைப் பார்த்து வெட்டவேண்டாம்
ஏழையெளிய பிச்சைக்காரரை யெதிர்த்து வெட்டவேண்டாம்
உங்களையெதிர்த்த சிப்பாய்மாரை டாருய் தீர்த்திடுங்கள்
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டார் ஜமேதாரு மாரும்
ஆனல்நல்ல தாகட்டுமென்றர் ஜமேதாரு மாரும்
பன்னிரண்டங்கு படிவைத்தகுதிரை பாராசாரி குதிரை

## தேசிங்குராஜன் சண்டைக்குப் போகுதல்.

கனைத்துக்கதும்பி யெழுந்தானையா ராஜா தேசிங்கு
பாதநாட்டிய மாடிவருகுது பாராசாரி குதிரை
குதிரைவருவதைக் கண்ணுலேகண்டான் நவாப்பு சைதுல்லா
அண்ணுவாடா தம்பிவாடா பங்காரு நாய்க்கரே

குதிரைவருவதைக் கண்ணாலேபாரும் பங்காரு நாய்க்கரே
ஜல்திஜல்தி பீரங்கிதிருப்பு பங்காரு நாய்க்கனே
சுருக்காபலூத்தா கொடுத்தானையா பங்காரு நாய்க்கனும்
பலூத்தாசத்தம் காதிலேகேட்டது பாராசாரி குதிரை
நடுத்தண்டிலே வந்துகுதித்தது பாராசாரி குதிரை
இரண்டாங்கணவாய் சேத்துப்பட்டு தாவுத்துக் கானும்
குதிரைசேனைக்கு சைகையூதினான் தாவுத்துக் கானும்
ஊதினவுடனே சூழ்ந்துகொண்டார் சிப்பாய் மார்களும்
முப்பதினாயிரம் குதிரைவந்தது ராஜாவுக் கானாலும்
அந்தக்-குதிரையையெல்லாம் சுற்றிப்பார்த்தான் ராஜா தேசிங்கு
கலகலவென்று சிரித்தானையா ராஜா தேசிங்கு
இரண்டுகையிலே பட்டாவாங்கினான் ராஜா தேசிங்கு
ஆகாயவாணியை சாட்சிவைத்தான் ராஜா தேசிங்கு
பூமிதேவியை சாட்சிவைத்தான் ராஜா தேசிங்கு
சந்திரசூரியரை சாட்சிவைத்தான் ராஜா தேசிங்கு
ரங்கநாதரை சாட்சிவைத்தான் ராஜா தேசிங்கு
ராமுராமுரே தேவாவென்று போட்டா னொருவெட்டு
துண்டுதுண்டாய் தூக்கிவெட்டுறான் ராஜா தேசிங்கு
தலைதலையா யுருட்டிப்போடுறான் ராஜா தேசிங்கு
டாறுடாறாய்க் கிழித்துப்போடுறான் ராஜா தேசிங்கு
இனியில்லாமல் புகுந்துவெட்டுறான் ராஜா தேசிங்கு
வெட்டொன்றுக்கு எட்டுதுண்டாய் டாறாய் விழுந்தது
ஜெயராமு கெங்காராமு புகுந்து வெட்டுறார்கள்
ராமுசிங்கு லட்சுமணசிங்கு புகுந்து வெட்டுறார்கள்
சிற்றப்பதுரை தரணிசிங்கு புகுந்து வெட்டுறாராம்
மூன்றரைநாழிக்கு மூலைக்குமூலை புகுந்து வெட்டுறாராம்
இருபத்தொரு குதிரையோடே புகுந்து வெட்டுறாராம்
அத்தனைகுண்டுக்கும் தப்பிப்போகுது பாராசாரி குதிரை
குண்டுசந்திலே நுழைந்துபோகுது பாராசாரி குதிரை
முப்பதினாயிரம் துப்பாக்கிகுண்டு முடுக்கியே விட்டாலும்
அந்தகுண்டுக்கும் தப்பிப்போகுது பாராசாரி குதிரை

நெருப்புமாரியாய்ப் பொழிகிறுனையா தாவுத்துக் காரனும்
அந்தகுண்டுக்குத் தப்பிவருகுது பாராசாரி குதிரை
குண்டுக்குமேமேலே பறக்குதையா பாராசாரி குதிரை
குண்டுவிழுந்த நவாப்புபாளையம் கூவி மாளுதுபார்
ஒருகுதிரைமேலே ஆயிரம்குதிரை வந்து விழுந்ததுபார்
ஒருகத்திமேலே ஆயிரம்கத்தி வந்து விழுந்தது
ஆயிரங்கத்தியும் தள்ளிவெட்டுறுன் ராஜா தேசிங்கு
கலகலகலகல கலகலவென்று கத்திகள் மின்னுதுபார்
மிகுமிகுமிகுமிகு மிகுமிகுவென்று பீரங்கி பறக்குதுபார்
மேல்குண்டுக்குக் கீழேபாயுது பாராசாரி குதிரை
இத்தனைக்கும் தப்பிப்போகுது பாராசாரி குதிரை
மருந்துபுகையிலே புகுந்துவெட்டுறுன் ராஜா தேசிங்கு
தென்னங்குலைபோல் புகுந்துவெட்டுறுன் ராஜா தேசிங்கு
சோளத்தட்டை வீசினுப்போலே யறுத்துப் போடுறுனும்
வாழைத்தண்டை யரிந்தாப்போலே யறுத்துப் போடுறுனும்
காகாவென்று சுழன்றுவருகுது பாரா சாரியும்
காணைகாணையாய் விழுந்துபோகுது நவாப்பு பாளையமும்
கண்டமட்டுஞ் சாடுகிறுனையா சிப்பாய் தேசிங்கு
பதினைந்துநாழிகை மிகவுமாச்சுது நவாப்பு பாளையமும்
சோறுசோறென்று துடிக்குதையா நவாப்பு பாளையமும்
பாணிபாணியென்று தவிக்குதையா நவாப்பு பாளையமும்
ரொட்டிரொட்டியென்று தவிக்குதையா நவாப்பு பாளையமும்
தாயில்லாப்பிள்ளைபோல் தவிக்கிறுர்கள் நவாப்பு பாளையத்தில்
இனியிருந்தால் பிழைக்கமாட்டோம் தேசிங்கு முன்னுலே
என்று-கள்ளக்குறிச்சியைத் தேடிப்போகுது சிறிது பாளையமும்
ஆரணிக்கோட்டைக் கோடிப்போகுது நவாப்பு பாளையமும்
ஓடிப்போகிற ஜனத்தைக்கண்டான் ராஜா தேசிங்கு
அந்தவேளையிற் கண்ணுலேகண்டான் தாவுத்துக் காரனும்
இருபதினுயிரந் துருப்புகுதிரை யேவி விட்டானும்
குதிரைவருவதைக் கண்ணுலேகண்டான் ராஜா தேசிங்கு
படபடவென்று துடிக்குதுமீசை ராஜாவுக் காணுலும்

காகரவென்று சுழன்றுவருகுது பாராசாரி குதிரை
காணைகாணையாய் விழுந்துபோகுது நவாப்பு பாளையமும்
கால்மாடுதலைமாடாய் விழுந்துபோகுது துருப்பு குதிரைகளும்
இருபதினாயிரங் குதிரையங்கே டாருய் விழுந்தது
ஆனைவேடிக்கையைப் பார்க்கிருனையா ராஜா தேசிங்கு
இருப்புலக்கையை வாங்கியடிக்குது பட்டத்து யானையும்
காகரவென்று சுழற்றிவருகுது யானைக ளானாலும்
வீறிட்டுக்கொண்டே ஓடிவருகுது யானைக ளானாலும்
ஆனையைப்பார்க்கிலும் ஜாணுயரம்பாயுது பாரா சாரியும்
ஆனையின்மேலே தாண்டிவிழுகுது பட்டத்து யானையும்
பாலாஉருவி கையிலேபிடித்தான் ராஜா தேசிங்கு
குத்திக்குத்தி சாய்த்துப்போடுமுன் ராஜா தேசிங்கு
உலக்கைபோட்டு சலாம்வாங்குது பட்டத்து யானையும்
மண்ணைக்கவ்வி சாகிறதையா மதத்த யானைகளும்
குடல்சரிந்து சாகிறதையா சிலசில யானைகளும்
மத்தகம்பிளந்து சாகிறதையா மதங்கொண்ட யானைகளும்
உதைத்துக்கொண்டு சாகிறதையா மதங்கொண்ட யானைகளும்
காகரவென்று உதைத்துச்சாகுது கறுத்த யானைகளும்
இரண்டாயிரம் யானையங்கே டாருய் விழுந்தது
யானைவிழுவதைக் கண்ணாலேகண்டான் ராஜா தேசிங்கு
யானையின்மேலே அம்பாரிவைத்து அவனு மிருக்கிருனும்
அங்கேயிருந்த தாவுத்துக்காரனைக் கண்ணாலே கண்டானும்
கலகலவென்று சிரித்தானையா ராஜா தேசிங்கு
இடதுகாலுக்குச் சிமிட்டாகொடுத்தான் பாரா சாரிக்கு
முன்னங்காலைத் தூக்கிவைத்தது யானை தலைமேலே
பாலாஉருவி போட்டானையா ராஜா தேசிங்கு
முன்னேயிருந்த மாவெட்டியானும் நிலத்தில் விழுந்தானும்
மாருக்குப்பாலா யிழுத்துப்பிடித்தான் ராஜா தேசிங்கு
அந்தவேளையில் சலாம்வாங்கினன் தாவுத்துக் காரனும்
நானொருசேதி சொல்கிறேன்கேளும் ராஜா தேசிங்கு
நாணிப்போதே ஓடிப்போகிறேன் ராஜா தேசிங்கு

அந்தவேளையில் கோபம்பிறந்தது ராஜாவுக் காணும்
நவாப்புக்கேற்ற சினேகிதக்காரன் தாவுத்துக் காரனும்
நாராயணு கோவிந்தாவென்று போட்டான் பாலாவை
சேத்துப்பட்டு தாவுத்துக்காரன் நிலத்தில் விழுந்தானும்
நிலத்தில்விழவே நவாப்புஜனமும் நிமிஷ மிருக்கவில்லை
கண்டபடியே ஓடிப்போச்சுது நவாப்பு பாளையமும்
தாவுத்துக்காரன் செத்தசேதி நவாப்பு கேட்டானும்
இனியில்லாத பயம்பிடித்தது நவாப்புக் காணும்
இனியிருந்தால் தலையேபோகும் தேசிங்கு கையாலே
ஓடிஓடி ஒளிக்கிறுனையா நவாப்பு சைதுல்லா
அந்தவேளையி லென்னபண்ணுறுன் ராஜா தேசிங்கு
இருபத்திரண்டு வயதுள்ளபாலன் ராஜா தேசிங்கு
ஐம்பதிணுயிரஞ் சேனைவெட்டினுன் ராஜா தேசிங்கு
இரண்டாயிரம் யானைவெட்டினுன் ராஜா தேசிங்கு
கைகளெல்லாம் ஓய்ந்துபோச்சுது ராஜாவுக் காணும்
இரத்தக்கவுலும் கம்மிக்கொண்டது ராஜாவுக் காணும்
நவாப்புபாளையம் சுற்றிப்பார்த்தான் ராஜா தேசிங்கு
இவனைப்பார்த்துப் பதுங்குகிறுர்கள் சிப்பாய் மார்களும்
எடுத்தபீரங்கி எடுத்தாற்போலே போட்டு ஓடுறுர்கள்
தன்னிடஜனத்தைக் கண்ணுலேகண்டான் ராஜா தேசிங்கு
குண்டுமருந்தி விருந்துசெத்தது நவாப்பு பாளையமும்
கலகலவென்று சிரித்தானையா ராஜா தேசிங்கு
செஞ்சிக்கோட்டைக்குப் போவோமென்று திருப்பினுன் குதிரையை
அறுபத்துநான்கு ஜண்டாமரமும் டாறுப் விழுந்தது
ஐந்துகுதிரை யோடேவாரான் ராஜா தேசிங்கு
சங்காபரணி கரையிலேவந்தான் ராஜா தேசிங்கு
குதிரையைவிட்டுத் தண்ணியிற்குதித்தான் ராஜா தேசிங்கு
முழங்கால்வரையில் தண்ணியங்கே பிடித்து ஓடுகுது
கத்திகழுவி உறையிலேபோட்டான் ராஜா தேசிங்கு
மூன்றுகைதண்ணீர் குடித்தானையா ராஜா தேசிங்கு
மரத்துநிழலிலே உட்கார்ந்தானையா ராஜா தேசிங்கு

அந்தவேளையி லென்னபண்ணுருன் அவனிட தாயாதி
தேசிங்கு தாயாதியையா தன்சிங்கு ராஜனும்
ஒற்றைக்குதிரை போட்டுக்கொண்டு ஓடிவந்தா னெதிரே
இராமுராமுரே சீதாராமுரே ராஜா தேசிங்கு
நீர்-திரும்பிவந்த வயணமென்ன ராஜா தேசிங்கு
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் ராஜா தேசிங்கு
நானொருசேதி சொல்கிறேன்கேளும் தன்சிங்கு ராஜாவே
நவாப்புசெத்துப் போனானையா தன்சிங்கு ராஜாவே
நீர்வந்த வயணமென்ன தன்சிங்கு ராஜாவே
என்னபேச்சுப் பேசினீரையா ராஜா தேசிங்கு
செத்துப்போனவன் சேத்துப்பட்டு தாவுத்துக் காரனும்
மலையடிவார மூலையோரத்தில் நவாப்பு ஒளித்தானும்
சொச்சத்தோடே விட்டுப்போகாதே ராஜா தேசிங்கு
ஜல்திஜல்தி புறப்படுமென்றான் தன்சிங்கு மகாராஜன்
இந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் சிப்பாய் தேசிங்கு
கலகலவென்று சிரித்தானையா ராஜா தேசிங்கு
தனக்குவளர்த்த பாராசாரியை முன்னுக்கு வரச்சொன்னான்
பன்னிரண்டங்கு படிவைத்தகுதிரை பாராசாரி குதிரை
முன்னுக்குவந்து நின்றதுபாரு பாரா சாரியும்
ஐந்துகுதிரையோடு வாரானையா ராஜா தேசிங்கு
அவன்-மார்பிலிருந்த ரங்கநாதர் வழியிலே நின்றாராம்
அவன்-தோளிலிருந்த ரங்கநாதர் தூரத்தில் நின்றாராம்
இரங்கநாதரைக் கண்டுதொழுதான் ராஜா தேசிங்கு
அரிஅரி கோவிந்தாவென்றான் ராஜா தேசிங்கு
அப்பாகேளும் அப்பாகேளும் குழந்தை தேசிங்கு
இத்தனைசண்டை பண்ணினையடா குழந்தை தேசிங்கு
இன்றையசண்டை நிறுத்திப்போடடா குழந்தை தேசிங்கு
நாளைசண்டை வைத்துக்கொள்ளடா மகனே தேசிங்கு
நானுங்கூட வருகிறேனடா மகனே தேசிங்கு
அந்தவார்த்தையைக் காதிலேகேட்டான் சிப்பாய் தேசிங்கு
கையெடுத்துத் தொழுதானையா ராஜா தேசிங்கு

என்னைவிட்டுநீர் பிரிந்துபோனீர் ரங்க நாதரே
என்னிடபலமும் பாதிபோச்சுது ரங்க நாதரே
நான்-முன்வைத்தகாலை பின்வைப்நீபனே ரங்க நாதரே
இன்றைக்குஞ்சாவு நாளைக்குஞ்சாவு ரங்க நாதரே
பிறந்தவன்றைக்கே சாவிருக்குது ரங்க நாதரே
நான்-போய்வருகிறேன் போய்வருகிறேன் ரங்க நாதரே
ஆல்தியெனக்கு வுத்தாரந்தாரும் ரங்க நாதரே
இப்படிச்சொல்லி வருகிறானையா ராஜா தேசிங்கு

## நவாப்பு தோன்றமல்லனைத் தேசிங்குராஜனிடத்திற்குச் சமாதானத்துக் கனுப்புதல்.

போனராஜா திரும்பினசேதி நவாப்பு கேட்டானும்
தோன்றமல்லனை யனுப்பிவைத்தான் நவாப்பு சைதுல்லா
சமாதானத்திற் கனுப்பிவைத்தான் நவாப்பு சைதுல்லா
மூன்று-குதிரைகூட வருகிறானையா தோன்ற மல்லனும்
சமாதானத்திற்கு வருகிறானையா தோன்ற மல்லனும்
நாமத்தைப்போட்டு வருகிறானையா தோன்ற மல்லனும்
தேசிங்கு முன்னே வருகிறானையா தோன்ற மல்லனும்
குதிரையைவிட்டுக் கீழேகுதித்தான் தோன்ற மல்லனும்
மண்டிபோட்டு சலாம்வாங்கினான் தோன்ற மல்லனும்
பதில்சலாமுங் கொடுத்தானையா ராஜா தேசிங்கு
நானொருசேதி சொல்கிறேன்கேளும் ராஜா தேசிங்கு
ஒன்பதுகோடி சீமையுமக்கு நவாப்பு தாரோமென்றார்
ஒருகொள்ளைக்கு ஒன்பதுகொள்ளை நாவாப்பு தாரோமென்றார்
சமாதானமாய்ப் போவோமையா ராஜா தேசிங்கு
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் ராஜா தேசிங்கு
கலகலவென்று சிரித்தானையா ராஜா தேசிங்கு
என்னபேச்சு பேசினையடா தோன்ற மல்லண்ணா
இன்றைக்கிருக்குஞ் சமாதானம் அன்றைக் கிருக்கவேணும்
நவாப்புக்கேற்ற பிராணசினேகிதன் தாவுத்துக் கான்போனான்
என்னுடன்வளர்ந்த மோவுத்துக்கான் அவனும் போனானே

இரண்டுஜீவனுக்கு என்னிடஜீவன் என்னத்துக் கிருக்குது
என்கையில் பலமிருந்தால் ஆற்காடென்தனுக்கு
ஜல்திஜல்தி ஓடிப்போடா தோன்றமல்லண்ணா
தப்பிப்பிழைத்தோமென்றுசொல்லி ஓடியே வாறும்
தோன்றமல்லனைக் கண்டித்தசேதி நவாப்பு கேட்டானும்
வேங்கடாயனை அனுப்பிவைத்தான் நவாப்பு சைதுல்லா
ஐந்நூறுகுதிரை தயார்படுத்தினன் வேங்கட ராயனும்
பாளையம்வந்ததைக் கண்ணாலேகண்டான் ராஜா தேசிங்கு
பட்டாவுருவி கையிலேபிடித்தான் ராஜா தேசிங்கு
இடதுகாலுக்குச் சிமிட்டாகொடுத்தான் ராஜா தேசிங்கு
பாளையம்குறுக்கே புகுந்துவெட்டுறான் ராஜா தேசிங்கு
மண்டைமண்டையாய் தள்ளிவெட்டுறான் ராஜா தேசிங்கு
வேங்கடாாயனைக் கண்ணாலேகண்டான் ராஜா தேசிங்கு
ஆனையின்மீது அம்பாரிவைத்து அவனு மிருக்கிறானும்
இடதுகாலுக்குச் சிமிட்டாகொடுத்தான் ராஜா தேசிங்கு
முன்னங்காலைத் தூக்கிவைத்தது யானையின் தலைமேலே
பட்டாவுருவி வாங்கினனையா ராஜா தேசிங்கு
ஓங்கினபட்டா விழுந்ததேயானால் அவனே போய்விடுவான்
வாய்ப்பேச்சு பேசவில்லை வேங்கட ராயரும்
மார்பிலிருந்த பூணூலைக்காட்டினர் வேங்கட ராயரும்
பூணூல்போட்ட பிராமணரையா வேங்கட ராயரும்
போட்டிருந்த பூணூலைக்கண்டான் ராஜா தேசிங்கு
அவரைவிட்டு அப்பாலேபோனான் ராஜா தேசிங்கு
அரிந்தரிந்து போடுறான்பார் ராஜா தேசிக்கு
வாலிக்கோட்டை அவல்தாரும் டாறுய் விழுந்தானும்
மதுரைச்சீமை மலையாளத்தானும் ரண்டாய் விழுந்தானும்
திண்டுக்கல்லு கொலுமுகத்தானும் ரண்டாய் விழுந்தானும்
நூற்றெழுபத்திரண்டு பாளையக்காரனும் துண்டாய் விழுந்தானும்
அவரைச்சேர்ந்த பாளையமெல்லாம் அடியோடே விழுந்தாராம்
ஆனையின்மேலே தொட்டிவைத்து அவனு மிருக்கிறானும்
நவாப்பைக்கண்டு சிரித்தானையா ராஜா தேசிங்கு

இடதுகாலுக்குச் சிமிட்டாகொடுத்தான் பாரா சாரிக்கு
முன்னங்காலைத் தூக்கிவைத்தது யானைத் தலைமேலே
சல்-பட்டாவுருவி போட்டானையா சிப்பாய் தேசிங்கு
முன்னேயிருந்த மாவெட்டியானும் நிலத்தில் விழுந்தானும்
மாருக்குப்பாலா இழுத்துப்பிடித்தான் ராஜா தேசிங்கு
அந்தவேளைக்குச் சலாம்வாங்கினான் நவாப்பு சைதுல்லா
நானொருசேதி சொல்கிறேன்கேளும் ராஜா தேசிங்கு
நான்உன்மேலே சண்டைக்குவரவில்லை ராஜா தேசிங்கு
ஒருகொள்ளைக்கு ஒன்பதுகொள்ளை நான் தாரேனையா
சல்நீ-என்னபேச்சு பேசினாயடா நவாப்பு சைதுல்லா
இன்றைக்கிருக்குஞ் சமாதானம் அன்றைக் கிருக்கவேணும்
என்னுடன்வளர்ந்த பிராணசினேகிதன் மோவுத்துக் காரன்போனான்
என்தன்பலமும் பாதிபோச்சுது மோவுத்துக் காரனோடே
உனக்கிசைந்த பிராணசினேகிதன் தாவுத்துக் காரனும்
இரண்டுசீவனுக்கும் என்னுடசீவன் என்னத்துக் கிருக்குது
என்கையிற் பலமிருந்தால் ஆற்காடு என்னது
உன்கையிற் பலமிருந்தால் செஞ்சிகோட்டை உன்னது
நூற்றெழுபத்திரண்டு பாளையப்பட்டு உனக்கே யானாலும்
அந்த-எழுபத்திரண்டில் சேர்ந்ததடா செஞ்சிக் கோட்டையும்
செஞ்சிக்கோட்டை பணமுனக்கு குறைந்து போச்சுது
இதோ-பணம்வருகுது வாங்கிக்கொள்ளும் நவாப்பு சைதுல்லா
சல்-பாலாவருகுது வாங்கிக்கொள்ளும் நவாப்பு சைதுல்லா
ஈட்டிவருகுது வாங்கிக்கொள்ளும் நவாப்பு சைதுல்லா
தப்பித்துக்கொள்ளும் தப்பித்துக்கொள்ளும் நவாப்பு சைதுல்லா
இடதுகாலுக்குச் சிமிட்டாகொடுத்தான் பாரா சாரிக்கு
முன்னங்காலைத் தூக்கிவைத்தது யானைத் தலைமேலே
ஆனைவயிற்றில் தொட்டில்கட்டி அவனு மிருக்கிறானும்
தொட்டிலிலிருந்த மாவெட்டியானும் எட்டியே பார்த்தானும்
அவனுக்குமேலே கால்வைத்திருந்தது பாராசாரி குதிரை
வலதுகாலை ஓங்கிவெட்டினான் மாவெட்டி யானும்
வலதுகாலும் விழுந்துபோச்சுது பாரா சாரிக்கு

மூன்றுகாலோடே கீழேவிழுந்தது பாராசாரி குதிரை
மூன்றரைநாழிகை சண்டைபண்ணுறான் ராஜா தேசிங்கு
மூவாயிரம் ஜனங்களுமங்கே டாறாய விழுந் [illegible]
இடதுகாலுக்குச் சிமிட்டாகொடுத்தான் பாரா சாரிக்கு
முன்னங்காலைத் தூக்கிவைத்தது யானைத் தலைமேலே
இடதுகாலும் விழுந்துபோச்சுது பாரா சாரிக்கு
ஒரு-நிமிஷநாழி குதிரையிருந்தால் நவாப்பே போய்விடுவான்
இரண்டுகாலும் விழுந்துபோனதை ராஜா பார்த்தானும்
குதிரையைவிட்டுக் கீழேகுதித்தான் சிப்பாய் தேசிங்கு
இரண்டுகையிலும் பட்டாஉருவினான் ராஜா தேசிங்கு
குதிரையைவெட்டி யழுதானையா ராஜா தேசிங்கு
கோபம்வந்து மூண்டுகொண்டது ராஜாவுக் காணாலும்
நவாப்புபாளையம் புகுந்தானையா சிப்பாய் தேசிங்கு
எங்கேயிருந்த சிப்பாய்மாரும் ஏகமாய்க் கூடினார்கள்
பதுங்கிஇருந்த சிப்பாய்மாரும் பதுங்கி ஓடிவந்தார்
கலகலகலகல கலகலவென்று கத்தி சண்டைகளும்
சல்-கொக்குத்திரளில் ராஜாளியைப்போல் புகுந்து வெட்டுகிறான்
வெள்ளரிக்காய் வீசினாப்போல் வீசிப் போடுகிறான்
டாறுடாறாய்த் தீர்த்துபோடுறான் நவாப்பு பாளையத்தை
கைப்பிடியாய் பிடிக்கச்சொன்னான் நவாப்பு சைதுல்லா
அதற்கவனும் பயப்படமாட்டான் சிப்பாய் தேசிங்கு
இருந்தபாளைய மெல்லாம்விழுந்தது தேசிங்கு கையாலே
நவாப்பின்மேலே திரும்பினானையா ராஜா தேசிங்கு
நவாப்புஓடி யொளித்தானையா நடுவான பாளையத்தில்
நடுத்தண்டிலே தெரிகிறதுபாரு நவாப்பு பாளையமும்
நவாப்பைச்சுற்றி வந்தானையா ராஜா தேசிங்கு
கோபம்வந்து மூண்டுகொண்டது ராஜாவுக் கரணாலும்
சல்-கொக்கரித்து தண்டில்விழுந்தான் சிப்பாய் தேசிங்கு
ஆனமட்டுஞ் சாடுகிறானையா ராஜா தேசிங்கு
நவாப்புஜனங்கள் போனவழியை நானுஞ் சொல்லமாட்டேன்
ஆனைகுதிரை சேனையெல்லாம் அடியோடே மாண்டுதாம்

மண்டிபோட்டு உட்கார்ந்தானையா ராஜா தேசிங்கு
இவனுக்கெதிரியாரையுங்காணோம் நவாப்பு பாளையத்தில்
என்னுயிர்வாடி [illegible]கதிரி யாரையுங் காணோமே
என்னுயிரோடே செஞ்சிக்கோட்டைக்கு நான்தான் போவேனோ
சல்திசல்தி சக்கரமனுப்பும் ரங்க நாதரே
இனிமேலிருக்க ஞாயமில்லை ரங்கநாத சுவாமி
கோவிந்தா நாராயணாவென்று கும்பிட் டென்னசெய்தான்
கத்தியைச்சுழற்றி ஆகாயமெறிந்தான் ராஜா தேசிங்கு
மார்பைவிரித்து மண்மேல்படுத்தான் ராஜா தேசிங்கு
அப்போ-மூன்றுசத்தம் போட்டானையா ராஜா தேசிங்கு
ஸ்ரீகிருஷ்ணா ராமாவென்று கீழே விழுந்தானும்
ஸ்ரீரங்கா வென்றுசொல்லிக் கீழே விழுந்தானும்
ராஜாவிழுந்ததைக் கண்ணாலேகண்டான் நவாப்பு சைதுல்லா
தூக்கியெடுத்து மடிமீதில்வைத்தான் நவாப்பு சைதுல்லா

## நவாப்பு தேசிங்குராஜனை யெடுத்து மடிமீதில்வைத்து விசனப்படல்.

ஐயாகேளும் ஐயாகேளும் ராஜா தேசிங்கு
எண்ணாயிரங் குதிரைவெட்டினாய் அப்பா தேசிங்கு
மூவாயிரங்கோடி துரைகள்மாண்டாரே ராஜா தேசிங்கு
உயிருக்குப்பயந்து ஓடிஒளிச்சண்டா அப்பா தேசிங்கு
உடனே திரும்பி ஊருக்குப்போகாமல் ஐயா தேசிங்கு
பொன்னான திருமேனியைப் பொடியாக்கிவிட்டாய் அப்பா தேசிங்கு
தங்கத்திருமேனியை தரையில்கவிழ்த்தாயே அப்பா தேசிங்கு
பாவிநான்வந்து பழிகாரனானேன் பாலா தேசிங்கு
உன்னைப்போல்சூரத்து ஒருவருமில்லை ஐயா தேசிங்கு
நீ-ஒருவனிருந்தால் உலகத்தையாள்வாய் அப்பா தேசிங்கு
நான்-பாவியிருந்து பலனென்னசொல்லும் ஐயா தேசிங்கு
உலகத்தில்நிந்தனை யொருவனானேன் ராஜா தேசிங்கு
மண்பூமிவேண்டாமல் பொன்பூமிபோனாயே அப்பா தேசிங்கு
பொன்பூமியிலுன்தன் புகழ்நடக்குமோ ஐயா தேசிங்கு

இப்படிச்சொல்லி யழுகிறானையா நவாப்பு ஸைசதுல்லா
கதறியேமெத்த அழுகிறானையா நவாப்பு ஸைசதுல்லா
கண்கள்வந்து மூண்டுகொண்டது நவாப்புக் கண்ணுட
கூடவந்த சேனைகளெல்லாம் கோவென் றழுதார்கள்
கண்கள்தெளிந்து எழுந்துட்கார்ந்தான் நவாப்பு ஸைசதுல்லா
அண்ணுவாடா தம்பிவாடா பங்காரு நாய்க்கா நீ
குதிரைக்குக்கோரி கட்டச்சொல்லடா பங்காரு நாய்க்கா நீ
கோடிதிரவியம் தானம்கொடடா பங்காரு நாய்க்கா நீ
பட்டத்துப்பல்லக்கு கொண்டுவாடா பங்காரு நாய்க்கா நீ
பஞ்சணைமெத்தைகள் போட்டுப்பரப்படா பங்காரு நாய்க்கா நீ
அந்தட்சணமே செய்தானையா பங்காரு நாய்க்கனும்
வாரியெடுத்து மடிமீதில்வைத்தான் நவாப்பு ஸைசதுல்லா
பார்த்தழுது பல்லக்கில்வைத்தான் நவாப்பு ஸைசதுல்லா
நீயேவாடா நீயேவாடா தோன்ற மல்லண்ணு
செஞ்சிக்கோட்டைக்கு போய்விட்டுவாடா தோன்ற மல்லண்ணு

## தேசிங்கு இறந்ததை ராணி கேட்குதல்.

அந்தச்சேதியைக் காதிலேகேட்டாள் ராணி யம்மாளும்
அலங்கத்தின்மேலே ஏறிப்பார்த்தாள் ராணி யம்மாளும்
மார்புக்குக்காயம் பட்டதேயானல் கோட்டைக்கு வரச்சொல்லும்
தோளுக்குக்காயம் பட்டதேயானல் திரும்பிப் போகச்சொல்லும்
அந்தப்பேச்சைக் காதிலேகேட்டான் தோன்ற மல்லனும்
மார்புக்குக்காயம் பட்டதென்று உத்தாரங் கொடுத்தானும்
கோட்டைக்குள்ளே புகுந்தானையா தோன்ற மல்லனும்
பல்லக்கையிறக்கி வைத்தானையா தோன்ற மல்லனும்
சலாம்வாங்கித் திரும்பினானையா தோன்ற மல்லனும்
நவாப்புக்குவந்து சேதிசொன்னன் தோன்ற மல்லனும்
தப்பிப்பிழைத்தோ மென்றுசொல்லித் தைரிய மானாராம்
அலங்கத்தின்மேலிருந்த ராணியம்மாளும் இறங்கியே வந்தாளாம்
ஐயோதெய்வமே என்றுசொல்லிக் கதறி யழுதாளாம்
ராணியம்மா ளழுகிறசத்தஞ் செஞ்சியில் கேட்டது

செஞ்சிக்கோட்டை ஜனங்களெல்லாம் சேர வோடிவந்தார்
ராஜாபக்கத்தில் வந்தாளையா ராணி யம்மாளும்

### இராணி [illegible]ங்குராஜனைப்பார்த்துப் புலம்பல்.

என்னசொல்லிப் புலம்புறாளையா ராணி யம்மாளும்
என்தன்பேச்சு தடுத்துப்போனீரே என்தன் பிராணநாதா
உன்தன் எழுத்தும் இப்படியிருந்ததோ என்பிராண நாதா
நானுங்கூட வாறேனையா என்பிராண நாதா
அக்கினிக்குழியை வெட்டச்சொன்னாள் ராணி யம்மாளும்
சந்தனக்கட்டை குங்குமக்கட்டை சுருக்காய்ப் போடச்சொன்னாள்
ஸ்நானம் பண்ணினாளையா ராணி யம்மாளும்
இனியில்லாத உடைமைபூட்டினாள் ராணி யம்மாளும்
தலைநிறைய புட்பஞ்சூடினாள் ராணி யம்மாளும்
மஞ்சள்பாவாடை உடுத்தினாளையா ராணி யம்மாளும்
ரங்கநாதரை வேண்டிக்கொண்டாள் ராணி யம்மாளும்
பூமிதேவியை வேண்டிக்கொண்டாள் ராணி யம்மாளும்
ஆகாயவாணியை வேண்டிக்கொண்டாள் ராணி யம்மாளும்
அக்கினிக்குழியைச் சுற்றிவந்தாள் ராணி யம்மாளும்
கண்கள்குளிர ராஜாவைப்பார்த்தாள் ராணி யம்மாளும்
ராஜாவுடனே தீயில்குதித்தாள் ராணி யம்மாளும்
தேவதுந்துமி முழங்குதையா செஞ்சிக் கோட்டைக்குள்ளே
புஷ்பவிமானம் வந்துநின்றது செஞ்சிக் கோட்டைக்குள்ளே
இருவருங்கூடி ஏறினாரையா புஷ்ப ரதந்தனிலே
வைகுந்தபதவி யடைந்தார்களையா ராஜனும் ராணியும்
ரங்கர்பாதஞ் சேர்ந்தார்களையா ராஜாவும் ராணியும்

### வாழி

தேசிங்குராஜன் கதையைப்படித்தவர் செழித்து மிகவாழி
கேட்டவர்கள்யாவரும் சம்பத்துடையவராய்க் கிளைத்து மிகவாழி
புத்திரசம்பத் துடையவராய் வையகத்தோர் வாழி
மாடுகன்று மனையுமுண்டாய் கிளைத்து மிகவாழி
ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோடி

மூங்கில்போல் சுற்றங்கள் முசியாமலே வாழி
சந்திரசூரியர்கள் இருவருமே தழைத்து மிகவாழி
இந்திரனிந்திராணி வாழிநல்லோர் நல்லாருளுடனுடன்
முப்பத்துமுக் கோடிதேவர் முனிவர்களுடன்வாழி
நாற்பத்தெண்ணா யிரம்ரிஷிகள் தாமும் மிகவாழி
அஷ்டதிக்குள்ளோர் அஷ்டவசுக்களும் அனைவரும் மிகவாழி
சொன்னமொழிதவறாத தேசிங்குராஜன் சுகமாய் மிகவாழி
பலகலையுணர்ந்த பாவலர்களும் பண்பாய் மிகவாழி
நலமுடனிச்சரிதை படித்தவர்கள் நன்றாய் மிகவாழி
நீடூழி காலமுமாக நின்று மிகவாழி
ஊழியூழி யுலகிலுள்ளோர் உகப்பாய் மிகவாழி
வாழிவாழி நான்கு மறையும் தான்வாழி
வாழிவாழி யென்றுசொல்லி வரமளித்தா ரீஸ்வரனார்.

## வாழ்த்து.

சீருட னேசெஞ்சி நாடாண் டவனைச் செழிக்கவைத்து
ஏருட னேவாழ் குடிகளை ஆதரித் தெந்தைரங்கன்
பேருட னேதுதி செய்தாரப் பாதத்தைப் பிரியமதாய்த்
தாருட னேசேர் தேசிங்குராஜன் சரிதமும் வாழியவே.

தேசிங்குராஜன் கதை முற்றிற்று.



The Vaijayanti Press, Madras.